


# கலைமகள் கல்வி நிலையம்

## ஈரோடு



# பொன் விழா மலர்

## 1945 - '95

# கலைமகள் கல்வி நிலையம்

மேனிலைப்பள்ளி
மெட்ரிகுலேஷன் பள்ளி
துவக்கப்பள்ளி
குழந்தைகள் ஆங்கிலப் பள்ளி

# பொன் விழா மலர்

## 1945 - 1995



அமரர் ஐயா

உயர்திரு. S. மீனாட்சி சுந்தரனார் B.A., L.T., அவர்கள்

கலைமகள் நிறுவனர் - 1945

தாளாளர் - (1948 - 1968)

# முன்னுரை

'கல்விக்கோர் கலைமகள்' எனப்பாரோர் வியந்து போற்றும் வண்ணம், அரை நூற்றாண்டிற்கு முன் அமரர் ஐயா, உயர்திரு மீனாட்சி சுந்தரனார் அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட எமது கலைமகள் கல்வி நிலையம், இக்குறுகிய காலத்திற்குள், நிலையத்தின் உயிர் மூச்சாய் விளங்கிய எம் அன்னை, கடந்த ஆண்டு ஆகஸ்டு மாதம் இறைவனடி சேர்ந்த செல்வி முத்தையா அவர்களின் சீரிய தலைமையில் பல வகையிலும் வளர்ந்து பெருகி சீரோடும் சிறப்போடும் இயங்கி வருகிறது.

குழந்தைப் பள்ளியாய் உருவாகிய எம்நிலையம், உயர்நிலைப் பள்ளியாக உயர்ந்து, தற்போது மேனிலைப்பள்ளியாகப் பரிணமிக்கிறது. வளர்ந்து வரும் சமுதாயத் தேவைகட்கு ஈடு கொடுக்கும் வகையில் குழந்தைகள் ஆங்கிலப் பள்ளியுடன் (Preparatory) மெட்ரிகுலேஷன் பள்ளியாகவும் உயர்ந்துள்ளது. ஆயிரக்கணக்கான குழந்தைகளும், மாணவியரும் பள்ளி வளாகத்திற்குள் பவனி வர, ஆசிரியரும் அலுவலரும் சுறுசுறுப்புடன் இயங்கி வரும் ஒரு தெய்வீகக் கலைக் கூடமாய்த் திகழ்ந்து வருகிறது எமது பள்ளி எனில் அது மிகையாகாது.

காந்திய வழி நின்று வாய்மை, அஹிம்சை, எளிமை, இறையுணர்வு எனும் நற்பண்புகளை எமது மாணவியர் மனதில் பதிய வைத்தும் சிறந்த நன்முத்துக்களை, ஆக்கப் பணிகளில் ஈடுபடும் நல்ல பிரஜைகளை, நாட்டின் நலனுக்காக உருவாக்குவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது, எமது கல்விக் கூடம்.

அரசு பொதுத் தேர்வுகளில் 30 ஆண்டுகளாய்ப் பெற்று வரும் நூறு சதவீதத் தேர்ச்சியெனும் பொற்சரங்களையணிந்து, மாவட்ட, மாநில, தேசிய பல்வகைப் போட்டிகளில் பெறும் வெற்றியெனும் பொற்கடகங்கள் அணிந்து தொல்பொருள் ஆய்வுக்கூடம், சிறந்ததொரு நூலகம், அறிவியல் ஆய்வுக் கூடம், கணிப்பொறிப் பயிற்சிக் கூடம் எனும் வைரக்கற்கள் பதிக்கப்பட்ட பொன் மகுடமும் அணிந்து, இப்பொன்விழா ஆண்டில் பொற்காரிகையாய் எழிலுற விளங்குகிறாள் எமது 'கலைமகள்' நங்கை.

நிறுவனர் ஐயாவின் பரந்த நோக்கினாலும், நிர்வாகி அன்னை செல்வி முத்தையாவின் தளராத தன்னம்பிக்கையினாலும், ஆசிரியர், அலுவலரின் அயராத உழைப்பினாலும், மாணவியர், பெற்றோரின் ஒத்துழைப்பினாலும், 'கலைமகள்' பெருமளவில் வளர்ச்சி அடைந்து நாட்டின் முன்னோடியான கல்வி நிலையங்களில் ஒன்றாக திகழ்ந்து வருகிறது. பவளவிழா, நூற்றாண்டு விழா நோக்கி பயணத்தைத் தொடர்கின்ற எமது கல்வி நிலையம் ஈரோட்டிற்குப் புகழ் சேர்க்கும் ஒரு தலை சிறந்த நிறுவனமாய்த் திகழ இறையருள் பொழிந்திட வேண்டுகிறேன்.

**திருமதி. சு. மங்களவதி** எம்.ஏ.,எம்.எட்.,

தாளாளர்.

# From the Editor's Desk

We consider it a great privilege to pen these few lines from the Editor's desk. Perhaps I'm doubly privileged since I had done the same job in the Silver Jubilee Souvenir too.

The Golden Jubilee of Kalaimagal Kalvi Nilayam is a prestigious occasion in which we present this Souvenir with a grateful heart, grateful to God Almighty for his abundant grace and benevolent guidance in the last fifty years. This is the appropriate occasion to remember the Founder of the Institution, venerable Iyyah, Mr. Meenakshi Sundaram Mudaliar, B.A.L.T. who had dedicated this Institution for the cause of women's education. The seed which he sowed was carefully nourished by our beloved Amma, Miss. Muthiah B.A.B.T, our Late Correspondent. Four decades of Amma's life were spent in the campus of Kalaimagal Kalvi Nilayam and no wonder the insititution has developed into many branches

We are extremely grateful to both Iyyah and Amma who, inspite of facing many agonising situations, carried on the inspiring work setting a goal before them.

On this happy occasion, we remember with gratitude, our present Correspondent, Mrs. Mangalavathy for her valuable guidance which made our task easier. We thank the team of the hard-working teaching staff, non-teaching staff, the hostel staff and others who contribute a lot to the successful venture of this institution.

The philanthropic public of Erode and parents had always been a source of strength and support to our institution for the last fifty years. We gratefully acknowledge all that they had done so far and we confidently believe that the same benefaction will continue for many more years to come.

We thank our Honourable Ministers and all other eminent persons who have paid tribute to the institution through the messages published in this souvenir. We thank all those who have contributed articles.

The members of the editorial board deserve our gratitude and appreciation for their valuable assistance.

Lastly we thank Rajan Art Printers Sivakasi for their kind and patient co-operation bringing out the souvenir very attractively.

Thank you.

MRS. FELICIA JOSEPH. M.A., M.Ed.,
Editor & Coordinator.

PROFESSOR. K. PONNUSAMY, M.Sc., B.L.,
Minister for Education

SECRETARIAT,
MADRAS - 600 009.

Dated 27.09.1995

It gives me immense pleasure to learn that Kalaimagal Kalvi Nilayam, Erode has reached a golden landmark in the field of education, the noblest of all the services. The successful completion of 50 years by the institution speaks volumes about its management and staff.

I wish the golden jubilee celebrations and the publication of the souvenir a grand success.

(K. PONNUSAMY)

AVINASHILINGAM INSTITUTE FOR HOME SCIENCE AND HIGHER EDUCATION FOR WOMEN - DEEMED UNIVERSITY





COIMBATORE - 641043
TAMIL NADU


July 26, 1995


**Rajammal P. Devadas**
M.A., M.Sc., Ph.D., (Ohio State), D.Sc., (Madras),
Hon D.H.L. (Oregon State), Hon D.H.L. (Ohio State),
Hon D.Sc., (C.Azad, Agri University, Kanpur)
CHANCELLOR


*Service to humanity is service to God. The fifty long years of service to the cause of girls' education is undoubtedly laudable, considering the present status of girls' education in India.*

*The tremendous growth of the institution in all aspects of education and the successes registered under the able guidance of (Late) Sri Meenakshi Sundaram Mudaliar and (Late) Selvi. M. Muthiah deserve deep appreciation. Selvi Muthiah was an exemplary role model for all teachers.*

*On this happy occasion of the Golden Jubilee Celebrations of the Kalaimagal Kalvi Nilayam, I send my sincere and best wishes to the Correspondent, Staff and Students.*

*I wish the institution sustained growth and many more laurels in the years to come.*

(Rajammal P. Devadas)

**G. RANGANATHAN,** M.A., M.Ed.,
DIRECTOR

☎ Off: 8278796, Res: 5375994
Directorate of School Education,
D.P.I. Compound, College Road,
Madras - 600 006.

Date: 8.6.1995

*Dear Mrs. Mangalavathy,*

*I am immensely pleased to know that Kalaimagal Kalvi Nilayam, Erode is celebrating its Golden Jubilee in the month of September - 1995.*

*No doubt, it is a Himalayan achievement to serve for the causeof education, particularly Women's education, for 50 long years. Another laudable feature of this august academy is that it has been uninterruptedly producing 100% result in S.S.L.C. for the last 30 years. Kalaimagal Kalvi Nilayam is name in every home in the State for its excellent performance not only for the sheer importing information/knowledge to the Students but also for its continued efforts in the over-all development of the learners.*

*"All experience is an arch wherethro'*
*Gleams that untravelled world".*

*True, 50 Years of service will further lead you to the unexplored and untravelled world of education.*

*I congratulate every one of you who contributes his/her valuable time and energy for the uplift of this Institution.*

*I wish all the best for the success of the Golden Jubilee Function.*

*With Warm regards,.*

Yours sincerely,

**(G. RANGANATHAN)**

சு. முத்துசாமி,
மக்கள் நலத்துறை அமைச்சர்.

தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009.

நாள்: 25.7.1995

கல்விப் பணிக்கெனத் தன்னையே அர்ப்பணித்த பேரறிவாளர் சாதி சமய வேறுபாடுகளைக் கடந்து காந்தியடிகள் வழியில் நின்ற செம்மல் மீனாட்சி சுந்தரனார் அவர்களால் நிறுவப்பட்ட ஈரோடு "கலைமகள் கல்வி நிலையம்" இந்த வருடம் பொன்விழா காண்பது அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

1945-ல் நிறுவப்பட்ட இப்பள்ளி 50 ஆண்டுகளில் ஆல்போன்று தழைத்துப் பல்லாயிரக்கணக்கான மாணவ மாணவியருக்குக் கல்வியோடு ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் போதித்து அவர் தம் வாழ்க்கையில் தன்னம்பிக்கையுடன் வீறு நடைபோட உதவிடும் பெரியதொரு தொழிற்கூடமாக இயங்கி வருகிறது. கல்வி முறையில் பல புதிய திட்டங்களைப் புகுத்தி, புதுமைகளைச் செய்து "தென்நாட்டின் சாந்தி நிகேதன்" எனப்புகழும் அளவுக்கு உயர்ந்துள்ள இந்நிறுவனத்தின் தொல் பொருள் ஆய்வுக் கூடம் இவை அனைத்திற்கும் மகுடம் வைத்தாற் போல் விளங்கி அயல்நாட்டினரையும் ஆய்வுக்காக ஈர்த்து ஓர் ஒப்பற்ற கலைக்கூடமாக திகழ்கிறது. இக்கல்வி நிலையத்தை அதன் நிறுவனர், பொதுமக்கள் சொத்தாக அர்ப்பணித்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது.

கல்வித் துறைக்கு முக்கியத்துவம் கொடுத்து அனைத்து ஏழை எளிய மக்களும் எளிதில் கல்விப் பயன் பெறும் வகையில் பல திட்டங்கள் வகுத்துச் செயல்படும் மாண்புமிகு தமிழக முதல்வர். டாக்டர். புரட்சித்தலைவி அவர்களின் ஆட்சிக் காலத்தில் "கலைமகள் கல்வி நிலையம்" பொன் விழா காண்பது மிகவும் சிறப்புடையதாகும்.

கடந்த 30 ஆண்டுகளாக பள்ளி இறுதி வகுப்புப் பொதுத் தேர்வுகளில் 100 சதவிகிதம் வெற்றி பெற்று வருவதுடன் உயர்நிலைப் பள்ளியில் மாவட்ட அளவிலும் மாநில அளவிலும் முதல் மதிப்பெண்ணைப் பெற்று வரும் இப்பள்ளிக்கூடம் மேலும் பல சிறப்புகளைப் பெற்று உலக அளவில் புகழ் பெற என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,

[சு. முத்துசாமி]

**K. A. SENGOTTAYAN**
Minister for
Transport and Forest

SECRETARIAT,
MADRAS - 600 009.

Dated: 12.7.1995

*I am very happy to know that the "Kalaimagal Kalvi Nilayam", Erode will be celebrating its Golden Jubilee Celebration in the month of September, 1995.*

*It is indeed heartening to know that the School has achieved 100% results in the S.S.L.C. Examination for the past 30 years and in the Higher Secondary Public Examinations for the past 7 years and in Matriculation for the last 5 years. I am very much impressed to know the school registered phenomenal growth in co-curricular activities.*

*Tamil Nadu Government under the dynamic leadership of Purotchi Thalaivi Dr. J. Jayalalitha, has taken much steps for Women education and Child Welfare.*

*I complement the Correspondent, Headmistress, Teachers and staff of this institution, Parents and Management, for appreciable work done by them. I am sure this team spirit will continue in all the years to come so that this Institution would continue to enjoy a memorable place in Education including extra curricular activities.*

*I wish the function success.*

KAS 12/7/95

**(K. A. SENGOTTAYAN)**

# வாழ்த்துக்கள்

டாக்டர்:-இரா. நெடுஞ்செழியன்
எம்.ஏ., டி. லிட்.,
நிதி அமைச்சர்.

தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009.

நாள்: 16.7.1995

அன்புடையீர்,

வணக்கம். ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்தின் பொன் விழா, 1995 செப்டம்பர்த் திங்களில் சிறப்பாக நடைபெற இருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன்.

கலைமகள் கல்வி நிலையம் பல்லாண்டுகளாகவே பெற்றோர்களுடைய நம்பிக்கையையும், நன்மதிப்பையும் பெற்று, நாட்டிலே முதல் தரமான ஒரு மேல்நிலைப் பள்ளி என்ற பெயர் பெற்று விளங்குவதை நான் நன்கு அறிவேன். அதன் சார்பாக நடைபெற்ற சில சிறப்பு விழாக்களில் கலந்து கொண்டு பெரு மகிழ்ச்சி அடையும் பேறு பெற்று இருக்கிறேன். கலைமகள் கல்வி நிலையம் நாட்டிலுள்ள பிற மேல்நிலைப் பள்ளிகள் எல்லாவற்றிற்கும், சிறந்ததொரு எடுத்துக்காட்டாக விளங்கும் தகைமையைப் பெற்றிருக்கிறது. அந்தக் கல்வி நிலையம் மேலும் மேலும் புகழ் பெற்று எல்லோருடைய பாராட்டுதல்களையும், போற்றுதல்களையும் சிறப்பாக எய்தி பல்லாண்டு காலம் இனிது வளர எனது உளங்கனிந்த வாழ்த்துக்களை உவகைப் பெருக்கோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,

இரா. நெடுஞ்செழியன்

(இரா. நெடுஞ்செழியன்)

PALANIVELU, M.Sc., B.T., Ph.D.,
ECTOR

Directorate of Teacher Education,
Research and Training,
MADRAS - 600 006.

Dated: 21.6.1995

ear Tmt. Mangalavathy,

I am happy to know that Kalaimagal Kalvi Nilayam is completing fifty years f service and releasing a Souvenir to mark the Golden Jubilee celebrations of he Institute.

The Institution with a record of outstanding achievements both curricular and o-curricular, richly deserves the place of distinction, being Universally acclaimed s a beacon light in the field of Education. The history of the education system f the Institute over the significant fifty years radiates its rich cultural tradition oupled with academic excellence. Every product of your Institute is essentially precious and productive addition to the human resource of our country.

I deem it a privilege to congratulate and complement the untiring efforts of the Management and Correspondent, dedicated services of the Teachers and excellent performance of the students of this great institution. I take this opportunity to pay my tribute to the rich contribution of Late (Miss) M. Muthiah, the former Secretary and Managing trustee. Under her stewardship, the Institution acclaimed popularity at the National level.

I wish the institution many more laurels in the annals of the history of Education in this country.

Yours sincerely,

(C. PALANIVELU)

**Professor W.A.F. HOPPER,**
M.Sc., M.Ed., Ph.D., A.I.E., (Lond.), Cert. Sc. Edn. (Ohio)
Director,
C.S.I. Council for Education.

Residence: 1, Bheemanna Garden Road,
Alwarpet, Madras: 600 018
Tele: 4997030

Dated: 16.6.1995

*I am very glad to learn that KALAIMAGAL KALVI NILAYAM will be celebrating Golden Jubilee in September 1995. The Jubilee year is a year of celebrations. We celebrate the contributions made by its founder Ayya avarhal (Sri Meenakshi Sundaram Mudaliar). At this time we also remember the contributions made by Miss M. Muthiah who served as Headmistress, Correspondent and Managing Trustee for over four decades. She is a model worthy of emulation. I knew both Ayya and Miss. Muthiah for about 30 years. They dedicated themselves to the upliftment of the down-trodden and marginalised communitites through educational development. They had a vision for a creative type of education which could liberate people from bondages and also transform them into useful citizens for the country. They themselves set up role models for both teachers and the taught to follow. I remember the days when Ayya and Miss. Muthiah used to go by car through rugged roads in order to collect archeological museum specimens. They have been duly classified and erected in the school premises. The institution has gained national and international recognition for its innovative models of school education involving children from the poorest of the poor.*

*The Institution has also developed the capacity and calibre of the teachers so that they could also serve the institution in solidarity and with one mind. This is a great achievement which has very few parallels in the country.*

*I take this opportunity to wish the institution many more Jubilee Celebrations.*

**(W.A.F. HOPPER)**

**K. KUPPUSAMY,** M.A., B.T.,
Chief Educational Officer (Retired)
ERODE - 638 002. Periyar Dist.

Phone: 04268/60235
Vavipalayam.

Dated: 26.7.1995

*Dear Mrs. Mangalavathy,*

*I am very happy to know that you are releasing a Souvenir on the occasion of the Golden Jubilee Celebration which will be held in the month of September 1995.*

*'Kalaimagal Kalvi Nilayam, Erode is one of the best centres of Education in Tamil Nadu for girls. It is known that its founder (Late) Sri Meenakshi Sundaram Mudaliar, B.A., B.T., and the former Secretary and Managing Trustee, Late Selvi Muthiah B.A., B.T., have sacrificed a lot to bring up this Institution to its present glory and fame. Hope the staff of the Institution serving under your leadership will continue to serve the cause of Education still better in the coming years. I wish the function all success.*

*With good wishes,*

*Yours sincerely,*

**(K. KUPPUSAMY)**

# பொருளடக்கம்

Extra Curricular Activities

அண்ணல் காந்திஜியின் அடிச்சுவட்டில்

சாரணீயம்

சஞ்சாயிகா திட்டம்

இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம்

அறிவியல் கண்காட்சிகள்

அறிவுப் பூஞ்சோலை

Competitions

மாணவியர் விடுதி

பெற்றோர் ஆசிரியர் சங்கப் பணிகள்

பிற மாநிலப் பத்திரிகையில் கலைமகள்

நெஞ்சில் ஓர் ஆலயம்

Kalaimagal Today - A Wonder

Darkness

Golden Gates

The Eternal Tree

Treading on the imprints

அன்றும் இன்றும் என்றும்

The Magic of Love

A teacher - Who is she?

Impact of Computers

எதிர் கால இந்தியனுக்கு

உன்னால் முடியும்?

சரித்திர நாயகி

# கலைமகள் கல்வி நிலையம் வாழியவே!



"கற்கண்டு சொற்கொண்டு வாழ்த்தி ஆழ்த்தும்"
'இலக்கிய மாமணி' கவிஞர் மரிய. விசுவாசம், B.O.L.,

ஏரோடும்
ஈரோடு
சீரோடும்
சிந்தையில்
நீரோடும்
நிலவோடும்
பேரோடும்
பாராளும்

எழிலோடும்
மாநகரில்
சிறப்போடும்
விந்தைகள்
காவிரிபோல்
போட்டியிடும்
புகழோடும்
மாணவிகளைப்

இலங்கும்
கடற்றக்
செழித்திடும்
சேர்த்திடும்
நிர்மலமான
நேர்த்தியான
பொன்விழா
பாரதம்தர

நிலைப்புகழ்
கலைமகளாய்க்
கல்விநிலையம்
நம்பள்ளி!
நம்பள்ளி
நம்பள்ளி
பூத்ததுவே
வாழியவே!

மாண்பின்
மீனாட்சி
அன்பிலே
ஆற்றலில்
தன்னுயிர்
தளராத
மன்னுயிர்
மங்காத

முழுவடிவம்
சுந்தரனார்
அன்னையாய்
இமயம்தொட்ட
கல்விக்குத்தந்த
உழைப்பால்
மாணவியர்
புகழுடன்

மரியாதை
தோற்றுவித்த
அறிவிலே
அருங்குணச்
தங்கமான
தழைத்தது
முழுவெற்றிக்குப்
தலைமைகள்

மிக்கஅய்யா
நம்பள்ளி
தெய்வமாய்
செல்வியாம்
முத்தையா
நம்பள்ளி!
பாடுபடும்
வாழியவே!

புதல்வியைப்
போதிக்கும்
நுதல்தனில்
நூற்றுக்கு
ஆயகலைகள்
அறிவார்ந்த
பொய்கையில்
பொன்விழா

பேணிடும்
ஆசிரியைகள்
இடுகின்ற
நூறுசதம்
கற்றுத்தரும்
வாய்மை
பூத்தமலர்
காணும்பள்ளி

பெற்றயன்னை
பள்ளிக்கு
வெற்றித்
எய்திடும்
இப்பள்ளியில்
அகத்தூய்மை
போல்என்றும்
பாருள்ளவரை

போலவே
வாய்த்தனரே!
திலகம்போல்
கழகம்இது!
கலைமகள்கள்
மாணவிகளாய்ப்
பொலிகவே!
வாழியவே!

# யான் கண்ட ஐயா

திருமதி. T. சரஸ்வதி, ஓய்வு பெற்ற தமிழாசிரியை

உலகம் புகழும் உன்னதமான கோயில்கள் நாளும் மக்களுக்கு நல்வழியையும், பக்தியையும் புகட்ட, வானுற ஓங்கி வளமான தோற்றமும், எழில் குலுங்கும் ஏற்றமும் பெற்றுக் குன்றாப் புகழுடன் விளங்குகின்றன. ஆனால் மங்களம் பொங்கும் மஞ்சள் வனிகமும் நூல் ஐவுளி வணிகமும் பல்லோர் போற்றுமளவில் நடந்து செல்வத்தைக் கொழிக்கும் சீர்மிகு திருமகள் குடிகொண்டிருக்கும் கொங்கு நாட்டின் ஒரு பகுதியான ஈரோடு மாநகரத்தில், ஈடும் எடுப்பும் பெற்றுக் கண்டோர் வியப்புற உயர்ந்தோங்கி ஒளிர்கின்ற அறிவுக் கோயில் ஒன்று உண்டு என்றால் அது எம் கலைமகள் கல்வி நிலையமேயாகும்.



அவ்வறிவுக் கோயிலின் தெய்வம் யாரென்று கேட்கின்றீர்களா? அவர்தான் நாமனைவரும் அன்போடு 'ஐயா' என்றழைக்கும் இருமொழிச் சொற்கொண்டல் உயர்திரு. S. மீனாட்சி சுந்தரனார் என்பவர். அவர் 1898ல் எளிய குடும்பத்தில் பிறந்தாலும் தாயின் அயரா உழைப்பாலும், அன்பின் அரவணைப்பாலும், தந்தையின் இறுதி ஆசையைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்ற பெரும் ஆர்வத்தாலும் ''முயற்சி திருவினையாக்கும்'' என்ற பொன்மொழியை உள்ளத்தில் கொண்டு முழு முயற்சியுடன் B.A, படித்து முடித்து ''ஆசிரியத் தொழிலே அறத்தொழில்'' என்ற நன்நோக்குடன் தன்னை ஆசிரியத் தொழிலுக்கே அர்ப்பணித்துக் கொண்டார். பல பள்ளிகளில் வேலை பார்த்து மாணவச் செல்வங்களுக்கு வற்றா அருவியென அறிவை அள்ளி வழங்கினார்.

''யான் பெற்ற பேற்றை இவ்வையகம் பெறுக'' என்ற குறிக்கோளுடன், தன் தாயின் நினைவுச் சின்னமாக 1945 ஜூலை மாதம் 77 குழந்தைகளும், இரண்டு ஆசிரியைகளும் கொண்ட சிறு பள்ளியாக இக்கலைமகள் அறிவுக் கோயிலைத் தொடங்கி அதன் தலைமை தெய்வமாக விளங்கிப் படிப்படியாக, மெய்வருத்தம் பாராது கண்தூங்காது, அரும்பாடு பட்டுக் கல்வியதிகாரிகளின் கருணையுள்ளத்தைச் சாதகமாக்கிப் பெற்றோர், பொதுமக்கள் ஆகியோரின் பேராதரவால் இன்று கலைமகள் பெண்கள் மேல்நிலைப் பள்ளியாக வளரச் செய்து இன்று நமக்கெல்லாம் அறிவுத் தெய்வமாக விளங்குகின்றார் ஐயா என்றால் அதில் ஐயமேது?

ஐயா அவர்கள் ஆசிரியப் பயிற்சியை முடித்துக் கொண்டு தலைமையாசிரியராக மாசள உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருந்த போது, ஒரு நாள் வகுப்புக்குச் செல்லும் போது அங்குக் குறைவான மாணவர்களே இருக்கக் கண்டு காரணம் வினவியபோது, சேலம் மாடர்ன் ஸ்டுடியோ, ஈரோடு சிதம்பரனார் பூங்காவில் 'மனோன்மணி' என்கிற படம் எடுத்துக் கொண்டிருப்பதால், அதைப் பார்க்க மாணவர்களில் சிலர் அங்கு சென்று விட்டனர் என்றறிந்து, ஐயா அவர்கள் மிக்க கோபத்துடன் ஏவலர்களை அழைத்துக் கொண்டு தாமே பூங்காவிற்குச் சென்றார். மாணவர்கள் ஐயாவைக் கண்டவுடன் பயந்து நான்கு திசைகளிலும் ஓடியபோது ஏவலர்கள் மூலம் அனைவரையும் வளைத்துக் கொண்டு கையிலிருந்த பிரம்பால் விரட்டி அடித்து மாடர்ன் ஸ்டுடியோ அதிபர் சுந்தரத்திடம், ''இவர்களையும் சேர்த்துப் படம் பிடித்துக் கொள்'' என்று சொல்லி மாணவர்களைத் திருத்திய காட்சியினை முன்னாள் மாணவர்கள் இன்றும் நினைவு கூர்ந்ததைக் கேட்டபோது ஐயாவின் கண்டிப்பினையும் கட்டுப் பாட்டையும் வியந்து பாராட்டாதவர்களே இலர்.

மேலும் மாண்புமிகு முதல்வர் M. பக்தவத்சலம் அவர்கள் முதலமைச்சராக இருந்த போது அவருக்கு ஈரோடு நகரப் பெரியார் மன்றத்தில் நகர ஆசிரியர் சார்பில் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. பாண்டிச்சே

பல்கலைக் கழகத் துணைவேந்தராய்ப் பணியாற்றித் தற்போது ஓய்வு பெற்றுள்ள உயர்திரு வேங்கட சுப்ரமணியம் அவர்கள் அப்போது கோவை மாவட்டக் கல்வி அதிகாரியாக இருந்தார்கள். ஐயாவைப் பாராட்டும் போது, ஈரோடு என்பதன் முதல் எழுத்தாகிய (E) - ஈ என்பது Education அதாவது கல்வி. தமிழகத்திலுள்ள மாணவர்களுக்குச் சிறந்த கல்வியைக் கற்றுக் கொடுக்கும் 'ரோடாக' ஈரோடு விளங்குகிறது என்று ஈரோடு என்பதற்குப் பொருள் கொண்டு ஐயா அவர்களின் கல்விப் பணி மற்ற நிலையங்களுக்கு வழிகாட்டிப் பாதையாக உள்ளது எனப் பாராட்டி மகிழ்ந்தார்.

ஐயா அவர்கள் தம் நிலையத்தில் மாண்டிசோரி, கிண்டர்கார்டன் முதலிய பிரிவுகள், மூலம் இளஞ்சிறார்களின் உள்ளக் கிடக்கையை உணர்ந்தவர். தொடக்கப் பள்ளியில் காந்திய கொள்கைகளுக்கேற்ப ஆதாரக் கல்வியைக் கற்பித்தவர். தாம் நகராட்சித் தந்தையாக இருந்ததால் நகராட்சித் தொடக்கப் பள்ளிகளில் எவ்வாறு கல்வி கற்பிக்கப்படுகிறது என்பதனையும் நேரில் அறிந்தவர். ஆதலின் தமிழக அரசு, தொடக்கப் பள்ளியில் எவ்வாறு கல்வி கற்பிப்பது என்பதனை அறிய, 'தொடக்கப்பள்ளி ஆய்வுக்குழு' ஒன்றினைக் காரைக்குடி அழகப்பச் செட்டியார் அவர்கள் தலைமையில் நிறுவியபோது, அக்குழுவில் ஐயா அவர்கள் இயக்குநராக இருந்து கல்விக்குச் சிறந்த வழிவகைகளைக் கண்டு கூறிய அவர் பெருமையை எப்படிப் புகழ்வது?

40 ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்தில் வழிபாட்டு முறையில் சிறிது தொய்வு ஏற்பட்டுப் 'பகுத்தறிவு' என்கிற பெயரில் விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் நிகழ்ந்த போது, குன்றக்குடி அடிகளார் அப்போது அருள்நெறித் திருக்கூட்டம் என்ற ஒன்றை நிறுவி ஆன்மீக நெறிகளைப் புகட்டிக் கொண்டிருந்தார். அவர்கள் பார்வையில் 'ஐயா' அவர்களின் பணிகள் முன்னே நின்றன. எனவே ஈரோட்டில் அருள்நெறியைத் தொடங்க ஐயாவை நாடியபோது, அவர்கள் உடன் இருந்து அருள்நெறித் திருக்கூட்ட முதல் மாநில மாநாட்டினை நடத்திக் கொடுத்தார். தமிழகம் முழுவதும் பயணம் செய்து அருள்நெறித் திருக்கூட்டத்தின் மாநிலத் துணைத் தலைவராகவும் செயலாளராகவும் இருந்தார். இந்நாட்டிற்குரிய இறைவழிபாட்டைத் தமிழகம் முழுவதும் அறிவியல் முறையில் கடைப்பிடிக்கச் செய்த முறையினைத் தருமபுரம், திருவாவடுதுறை, திருப்பனந்தாள் முதலிய ஆதீனங்கள் அறிந்து ஐயாவைப் பாராட்டினர் எனின் ஐயாவின் ஆற்றலுக்கு ஈடு இணை ஏது?



எளிய கதராடையும், ஆன்றவிந்தடங்கிய சான்றோர் தோற்றப் பொலிவும், நேர்மை உள்ளமும், கடமை தவறாமையும், கட்டுப்பாடும், கன்னியமும் குன்றா கருணை உள்ளமும், கல்வித் தொண்டையே பெருந்தொண்டாக எண்ணி, காந்திய வழியைத் தான் கடைப் பிடித்ததோடல்லாமல் தன் மாணவிகளும், ஆசிரியைகளும், பொதுமக்களும் கடைப்பிடித்தொழுக வேண்டும் என்பதில் கண்ணுங் கருத்துமாயிருந்து கற்றவரே அன்றி மற்றவரும் போற்ற கருத்தாழங் கொண்டு வாழ்ந்தாரென்றால் அது மிகையாகாது.

சில குடும்பத்தில் தந்தையை மகன், 'தந்தை' என்றும், 'அப்பா' என்றும், 'ஐயா' என்றும், 'அண்ணா' என்றும் அழைக்கும் பழக்கம் உண்டு. ஆனால் கலைமகளின் அறிவுத் தந்தையை ஒரு குடும்பத்தினர் மட்டுமின்றி, உறவினர்கள் மட்டுமின்றி அனைத்து மக்களும் அவரை "ஐயா" என்றழைக்கும்படி நம் உள்ளத்தில் குடி கொண்டு விட்டார். எப்படி உயர்திரு. காந்தி அவர்கள் அனைவர் உள்ளத்திலும் மகாத்மாவாக வாழ்கிறாரோ அவ்வாறே நம் ஐயாவும் வாழ்ந்து வருகிறார்.

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம்" - என்னும் வள்ளுவரின் வாய்மொழியைக் கற்றுணர்ந்த நம் ஐயா அவர்கள் என்றும் எப்போதும் தம் மாணவிகளோ, ஆசிரியர்களோ தன்னைக் காண வந்தால் குறிப்பிட்ட நேரத்தில் தான் வரவேண்டுமென்றில்லாது உடனே அவர்களைக் கண்டு பேசி அவர்கள் ஐயத்தையோ, கஷ்டங்களையோ கேட்டு அதற்கானவை செய்து வாழ்ந்ததால் தான் அவர் தொடங்கிய இவ்வறிவுக் கோயில் இன்று பல்கி பார் புகழ விளங்கிப் பல பரிசுகள் பெற்றுப் பல்கலைகளிலும் சிறந்து, நூற்றுக்கு நூறு விழுக்காடு பெற்றுப் பட்டொளி வீசித் திகழ்கின்றதன்றோ?

எப்போதும் ஒருவர் சிறந்த காரியத்தைச் செய்யும் போது அவருக்குப் பின்னால் ஒரு பெண் இருந்துதான் ஊக்குவிப்பாள் என்று சான்றோர் பலர் பகர்வர். அது எவ்வளவு உண்மை என்பதற்கு 'நம் ஐயா' அவர்களின் வாழ்க்கையே சான்றாகும். முதன் முதலில் கலைமகளைச் சிறுபள்ளியாகத் தொடங்கும் போது திருமதி. பாலாம்பாள் B.A., L.T. என்ற அம்மையார், ஐயா அவர்களுக்கு உறுதுணையாக இருந்து செயல்பட்டார். அவர் மறைந்த பின் செல்வி. முத்தையா B.A., B.T., அவர்கள் உற்றதுணையாக இருந்து உதவியதால்தான் இன்று கலைமகள் பல ஆயிரக்கணக்கான மாணவிகளையும் ஆசிரியைகளையும் தன்னிடங்கொண்டு கண்டோர் களிப்புறும்படி காட்சியளிக்கின்றதன்றோ?

இவ்வாறு ஐயா அவர்களும் அன்னையவர்களும் இக்கலைக் கோயிலின் இருகண்களாக இருந்து அருகு போல் வேரூன்றி ஆல்போல் தழைத்து விளங்கும்படிச் செய்து மறைந்த பின்னரும், "இதனை இதனால் இவன்முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல்" என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கிணங்க இருவரும் தேடிய நன்முத்தாக, வைரமாக, மாணிக்கமாக, கலங்கரை விளக்கமாக மிளிரும் திருமதி மங்களவதி M.A., M.Ed., அவர்களின் தலைமையில் இவ்வறிவுக் கோயில் காவிரியாற்று மணலினும் கணக்கிலவாண்டு கல்விப் பணியாற்றவும் அன்னார் நீடூழி வாழவும் இறையருள் புரிவாராக.

# மலரும் நினைவுகள்

திருமதி. K. S. ஞானமணி M.A., M.Ed.,
மாநில நல்லாசிரியர் விருது பெற்ற முன்னாள் தலைமை ஆசிரியை,
சௌராஷ்ட்ர பெண்கள் மேல்நிலைப் பள்ளி, மதுரை.

"நீ எதைச் செய்தாலும் அதன் பொருட்டு உனது மனம், இதயம், ஆன்மாமுழுவதையும் அர்ப்பணித்து விடு. நீ எதை நினைக்கிறாயோ அதுவாக ஆகிறாய்" - சுவாமி விவேகானந்தர்.

மேற்கூறிய கூற்றுக்கு இலக்கணமாக விளங்கியவரை சிலை வடிவமாக, 27-7-85 தேதி காலை 10.30 மணியளவில் கலைமகள் கல்வி நிலையம் பெண்கள் மேல்நிலைப் பள்ளியின் ஸ்தாபகரின் சிலையைக் கண்டேன்.

நிமிர்ந்த நன்னடை, நேர்கொண்ட பார்வை, நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெஞ்சம், முறுக்கிய மீசை, வீறு நடை, பேச்சிலும் மூச்சிலும் 'கல்வி, கல்வி, கல்வி' என்ற எண்ணம், கலைமகளுக்காகக் கட்டிய கல்விக் கூடம் அதன் வளர்ச்சியைத் தன் வளர்ச்சியாகக் கொண்டு விளங்கியவர் இன்று இறைவனோடு இறைவனாகி சிலை வடிவமாக நிற்கின்றார்.

தமிழிலும், ஆங்கிலத்திலும் அளவு கடந்த புலமை. எனவே அவருக்கு அளிக்கப்பட்ட பட்டப் பெயர் - "இருமொழிச் சொற்கொண்டல்", கடகடவென்றும் படபடவென்றும் மேகங்கள் இடி முழக்கம் செய்து கொள்வது போல் சொல் நயமும், பொருள் நயமும் கொண்டு அமையும் பேச்சுத் திறன் கொண்டது அவருடைய சொற்பொழிவுகள்.

"Education is something which makes a man self reliant and selfless" - என்று ரிக் வேதம் கூறுகிறது.

"By Education I mean an allround drawing out of the best in child and man, body and spirit" - Mahatma Gandhi.

மேற்கூறிய கூற்றுக்களைத் தன்னகத்தே கொண்டவர்.

'குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து
நல்லம்யாம் எனும் நடுவு நிலையாம்
கல்வி அழகே அழகு' - நாலடியார்.

எத்தனையோ விதமான அழகுகள் மக்களுக்கு இருப்பினும் கல்வி அழகு தான் அழகு. அதிலும் பெண்களுக்குக் கல்வி முக்கியம் என்பதை உணர்த்தும் பொருட்டு இக்கல்வி நிலையத்தை அவர் ஏற்படுத்தி இருக்க வேண்டும்.

பள்ளி ஸ்தாபகரும் பள்ளித் தலைமை ஆசிரியை செல்வி. முத்தையா அவர்களும் பள்ளி வளர்ச்சிக்கு அயராது உழைத்தனர். அவர்களுடன் இருந்து பணிபுரிந்தவர்களுக்கு அவர்களின் அருமை பெருமைகள் நன்கு தெரியும்.

மறக்க முடியாத பல நிகழ்ச்சிகள் என் மனதில் பசுமரத்தாணி போல் பதிந்து விட்டன. கி.பி. 1962ம் வருடம் பஞ்ச சீலக் கொள்கையை மீறி சீன அரசு நம் இந்தியாவின் மீது போர் தொடுத்தது. இந்தியாவின் வடகிழக்கு எல்லையில் லடாக் பகுதி, அதன் அருகாமையில் இருந்த சில பகுதிகளைச் சீனர்கள் ஆக்கிரமித்து விட்டனர். சமாதானத்தையே விரும்பிய இந்தியாவும் வேறு வழியின்றி போரில் ஈடுபட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இந்திய அரசாங்கம் பொதுமக்களிடம் உதவிக்கரம் நீட்டியது. காரணம் உயிரைத் துச்சமாக நினைத்து எல்லையைக் காக்கும் வீரர்களுக்கு உணவு, உடை, பணம் போன்றவை தேவைப்பட்டன.

நம் ஐயா அவர்கள் எல்லைப் பகுதியைப் பற்றி மாணவிகள், ஆசிரியைகள் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும் என நினைத்தார். நினைத்த மாத்திரத்தில் பள்ளிச் சுவர்களில் கரும்பலகைகள் ஏற்படுத்தப்பட்டன. வட இந்தியா கரும்பலகையில் வரையப்பட்டது. சீனர்கள் ஆக்கிரமித்த இடங்கள் சிவப்பு விளக்குகளாலும் எல்லைப் புறத்திலிருக்கும் மற்ற இடங்கள் வெள்ளை விளக்குகளாலும் சுட்டிக் காட்டப்பட்டன. அந்தச் செயல் எண்ணிய மாத்திரத்தில் நிகழ்ந்ததை நினைக்கும் போது அவர் விண்ணிலிருந்து ''விஸ்வகர்மா'' பூலோகத்திற்கு வந்து ''பூலோகத்து விஸ்வகர்மா'' என மாறிவிட்டாரோ என வியந்தேன். நாட்டின் மீது அவருக்குள்ள பற்று - அது எவ்வாறு வளர்ந்திருக்கலாம் - பள்ளி மீது பற்று - மாணவிகள் மீது பற்று, ஆசிரியைகள் மீது பற்று இன்றைய மாணவச் செல்வங்கள் நாளைய இந்தியாவின் தூண்கள் அவர்களைக் கட்டிக் காக்கும் ஆசிரியைகள் எல்லா விஷயங்களையும் நன்றாக அறிந்திருக்க வேண்டுமென்று கருதி, ஆசிரியைகளுக்கு ஆசிரியராய் நின்று, அச்சம்பவங்களை எங்களுக்கு விளக்கினார்.

அடுத்து அவர் மாணவிகளுக்கும் ஆசிரியைகளுக்கும் அளித்த வீரச் சொற்பொழிவு

''हममें एकता होता तो हमारा दश पराधीन नही होता''

''நம்மில் ஒற்றுமை இருந்தால் நம்நாடு அடிமையாகாது'' என்று வீரமுழக்கமிட்டார். ஆசிரியைகளும் மாணவிகளும் இந்திய நாட்டின் வீரர்களுக்கு உதவ உடைகளையும் பணத்தையும், சில ஆசிரியைகள் தங்கள் மோதிரங்களையும் அளித்தனர். அவைகளை எல்லாம் ஒன்று திரட்டி அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்தார்.

''மனிதன் ஆயுள் முழுவதும் கற்றுக் கொண்டே இருக்க வேண்டும். கற்க
மறுப்பவன் வாழ மறுப்பவன் ஆகிறான்' என்கிறார் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

அவ்வாறே ஐயா அவர்களும் மாணவிகள், ஆசிரியைகள் எப்பொழுதும் கற்றுக் கொண்டே இருக்க வேண்டும். கல்வி சீரிய முறையில் அமைய வேண்டும் என்று கருதி வாரம் ஒரு முறை ஒரு நேரம் ஒதுக்கி மாணவிகளை ஆசிரியைகள் நூலகத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும் என அன்புக் கட்டளை இட்டவர்.

மாணவிகளுக்கும், ஆசிரியைகளுக்கும் அருமைத் தந்தையாகவும், ஆசானாகவும், உற்ற நண்பராகவும் விளங்கினார். தான் பெற்ற இன்பத்தை மற்றவர்கள் பெறவேண்டும் என நினைத்தவர். ஆடி மாதத்தில் வரும் ''ஆடிப்பெருக்கு விழா'' சமயம் தலைமை ஆசிரியை, விடுதியிலிருக்கும் என்னைப் போன்ற ஆசிரியைகளையும் மாணவிகளையும் பள்ளிப் பேருந்தில் அழைத்துச் செல்வார்கள். விழாவினைக் கண்டு களிப்போம். எங்களுக்கு இனிப்பு, காரம் வழங்குவார்கள். விருந்தோம்பலிலும் அவர் சளைத்தவர் அல்லர்.

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காண் என்று கும்மியடி"

என்ற பாரதியாரின் பாடலுக்கேற்ப விளங்கியவர்கள் பள்ளித் தலைமை ஆசிரியை செல்வி. முத்தையா அவர்கள் ஈரோட்டில் ஒவ்வொரு ஆண்டிலும் நடைபெறும் - விஞ்ஞானக் கண்காட்சியில் கலைமகள் கல்வி நிலையம் தான் முதல் பரிசு பெற வேண்டும் என அவரும் உழைப்பார். ஆசிரியைகளை உழைக்க வைப்பார். எல்லாத் துறைகளுக்கும் ஐயா அவர்கள் உறுதுணையாக இருப்பார்.

33 ஆண்டுகளுக்குப் பின் அதன் வளர்ச்சியை நான் கண்டேன். வானளாவிய கட்டடங்கள். 15000 க்கும் மேற்பட்ட நூல்களைக் கொண்ட நூலகம். பௌதீகம், உயிரியல், வேதியியல் போன்ற பாடங்களுக்குத் தனித்தனி ஆய்வுக் கூடங்கள். நான் பார்த்த அளவில் கல்வெட்டுக்கள், தொல்பொருள் சின்னங்கள், விஜயநகரப் பேரரசு கால கல்தூண்கள், அக்கால மண் கலயங்கள் எல்லாம் சேகரித்து அதனைக் காட்சிப் பொருளாக்கி மாணவிகளின் அறிவுத் திறன் வளர வழிவகுத்த பள்ளி இந்த ஒரு பள்ளியாகத்தான் இருக்க முடியும் என நினைத்தேன்.

தமிழ் நாட்டிற்கோர் அண்ணா, ஈரோட்டிற்கு ஓர் பகுத்தறிவுத் தந்தை பெரியார் என்றால் கலைமகள் கல்வி நிலையத்திற்கோர் ஐயா அவர்கள். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவிட்ட பள்ளியை எண்ணி வியந்த வண்ணமிருக்க, "உள்ளே வாருங்கள்" என்ற அன்பு அழைப்பு என்னை, என் எண்ண அலைகளிலிருந்து விடுவித்தது.

அன்பிற்கும், பண்பிற்கும் உறைவிடமாக, "செய்யும் தொழிலே தெய்வம்" என்றெண்ணி கடமை ஆற்றும் தற்போதைய தாளாளர், அம்மையார் மங்களவதி அவர்களைக் கண்டேன். கண்ட மாத்திரத்தில் என் ஞாபகத்திற்கு வந்தது

*அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்*
*எம் ஐயாவையும் அம்மையாரையும் கண்டேன்*
*இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில்*
*இங்கோர் அருள் உள்ளம் கண்டேன்*
*மகிழ்ந்தேன் மனம் திறந்து பேசினேன்*
*வாய்ப்பளித்தார்கள் 'மலரும் நினைவிற்கு'*
*இட்ட பணியைச் செவ்வனே முடிக்க விழைந்தேன்*
*முடித்துவிட்டேன் மன மகிழ்ச்சியுடன்*
*கலைமகள் வாசம் செய்யும் பள்ளி*
*தானிலம் சிறக்க நல்லோர் போற்ற*
*பல்லாண்டு பல்லாண்டு வாழ*
*இறைவனை இறைஞ்சி வேண்டுகிறேன்.*

*நன்றி* *வணக்கம்*



செப்டம்பர், 1964 'நல்வழி' இதழில் உயர்திரு ஐயா அவர்கள் மாணவருக்கு எழுதிய கட்டுரை.....

# காலமும் அறிவும்

திரு. எஸ். மீனாட்சி சுந்தர முதலியார், பி.ஏ., எல்.டி.,
(முதல்வர், கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு.)

கற்கால மனிதர்கள் வாழ்ந்த காலத்திலும் ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணி நேரம்தான். இன்றும் ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணி நேரம்தான். காலம் நீள்வதில்லை.

பழைய கற்கால மனிதன் புதிய கற்கால நிலைக்கு வரப் பல ஆயிரமாண்டுகள் ஆயின. மனிதன் பறக்கத் தொடங்கியது 1919ம் ஆண்டில்தான். இந்த ஒரு சில ஆண்டுகளுக்குள் அவன் ஒரு மணிக்கு 20,000 மைல் வேகத்தில் பறக்கத் தெரிந்து கொண்டான். சில ஆண்டுகளுக்குள் அவன் பிற மண்டலங்களுக்குப் பறந்து செல்ல இயலுமென்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

நமது தோட்டத்துத் தென்னை மரத்தில் வாழும் தூக்கணாங் குருவியின் கூட்டைப் பாருங்கள். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த தூக்கணாங் குருவிகளின் கூடுகள் போலவேதான் இன்றும் அவைகள் கட்டுகின்றன. ஆனால் குகைகளிலும், வனங்களிலும் வாழ்ந்து வந்த மனிதன் இன்றைக்கு நூறு அடுக்குக் கட்டிடங்கள் கட்டி வாழ முடிகின்றது.

நமது முன்னோர்கள் பனையோலையில் எழுத்தாணி கொண்டு நூல்கள் எழுதினார்கள். இன்று புதிய அச்சு இயந்திரங்களில் ஒரு நாளில் ஆயிரக்கணக்கான நூல்கள் வெளியிடப் படுகின்றன. உலகில் பத்திரிக்கைகளுக்கும் புத்தகங்களுக்கும் ஒரு ஆண்டுக்குச் செலவாகும் மை, அரபிக் கடலின் நீரைவிட அதிகம் என்று வேடிக்கையாகச் சொல்வார்கள். இவ்வளவும் அறிவு வளர்ச்சிக்காகத்தானே.

கற்காலத்திற்கும், அணுக்காலத்திற்கும் உள்ள வேறுபாட்டை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இன்று அறிவின் ஆழமும் அகலமும் வெகு வேகமாக வளர்ந்து கொண்டே போகிறது. ஒவ்வொரு துறையிலும் இதை நாம் நாள் தோறும் பார்க்கின்றோம்.

இந்த நிலையில் அறிவு பெறப் பள்ளிக்கும், கல்லூரிகளுக்கும் செல்லும் மாணவ மாணவிகளின் கடமை என்ன? வளராத நேரம் - வெகுவேகமாக வளர்ந்து வரும் அறிவு - இச்சூழ்நிலைக்குத் தகுந்தபடி அறிவு பெற்று உயர்வடைய வேண்டுமானால் மாணவர்கள் காலத்தை ஒரு சிறிதும் வீணாக்காமல் பயன் படுத்த வேண்டும். வேகமாகக் கற்க வேண்டும். கவனமாகக் கற்க வேண்டும். நிறைய கற்க வேண்டும்.

இந்த உண்மை தெரிந்து காலத்தை நன்கு பயன் படுத்திக் கொள்ளும் நாடுகள்தாம் உலக அரங்கில் முன்னேறி வருகின்றன. மற்ற நாடுகளில் மக்கள் தொகை எவ்வளவு அதிகம் இருந்தாலும், இயற்கை வளம் நிறைய இருந்தாலும் அவை பின் தங்கிய நாடுகளாகவே இருக்கும்.

நம் நாட்டில் இதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. விஞ்ஞான அறிவு வளர வேண்டும். அதற்கு அடிப்படையான கணித அறிவு வளர வேண்டும் என்று சொல்லுகின்றோம். ஆனால் 30% இவ்விரு பாடங்களிலும் பெறுவதைப் பெரிய சாதனையாகக் கருதுகின்றோம். உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வில் நமது சென்னை மாநிலத்தில் 50,000 மாணவிகள் வெற்றி பெறவில்லையென்றால், இதனால் ஏற்பட்ட கால இழப்பு முதலியவைகளை எண்ணிப் பார்க்க வேண்டாமா? இவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் காலத்தை வீணாக்கியவர்கள் என்று துணிந்து கூறலாம்.

உலக வரலாற்றில் தமக்கென்று ஒரு தனி இடம் தேடிக் கொண்ட பெரியோர்கள் பலர் தங்கள் காலத்தை வீணாகக் கழித்திருந்தால், எல்லோரையும் போலத்தான் அவர்களும் வாழ்ந்து மடிந்திருப்பார்கள். மறைந்த நம் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு இரவில் நான்கு மணி நேரம் மட்டும் தூங்குவார், மீதி 20 மணி நேரமும் உழைப்பார். அமெரிக்கக் கோடீசுவரர் நம்மைப் போலத் தூங்கிக் கொண்டு இருந்தால் இத்தனை பொருளீட்டி வாரி வழங்கி வள்ளலாக மாறியிருக்க முடியுமா? இப்படிப்பட்ட பெரியோர்களின் வாழ்க்கையைப் பற்றிப் படித்து நாமும் காலத்தைப் பயன்படுத்தி முன்னேற வேண்டும்.

"நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடு நீரார் காமக் கலன்"

என்றார் வள்ளுவர். மறதி, காலம் நீட்டித்தல், சோம்பல், அளவு மீறிய தூக்கம் இந்நான்கும் கெடுகின்ற இயல்பை உடையவர் விரும்பி ஏறும் மரக்கலம் என்பது இதன் பொருள். இந்நாட்டின் வருங்காலத் தலைவர்களாகிய மாணவ மணிகள் இந்நான்கு பண்புகளையும் விலக்கி முன்னேற வேண்டும் என்ற எண்ணத்தை நரம்புகளில் பாய்ச்சி, குறைந்த காலத்தில் நிறைந்த அறிவு பெற முயற்சி செய்ய வேண்டும்.

காந்திஜி கீதை முழுவதையும் பாராமல் படிக்க விரும்பினார். நேரம் கிடைக்கவில்லை. எனவே அன்றாடம் பல் துலக்கும் இடத்தில் இரண்டு ஸ்லோகங்களை எழுதித் தொங்க விட்டுக் கொண்டு, பல் துலக்கிக் கொண்டே அவற்றைப் பாராமல் படித்து விடுவாராம். இளைஞர்கள் காலையில் ஆறுமணிக்கு எழுவதற்கு மாறாக ஐந்து மணிக்கு எழுந்திருப்பது என்று பழக்கப்படுத்திக் கொண்டால் ஒரு ஆண்டிற்கு 365 மணி நேரம் நமக்கு அதிகம் கிடைக்குமல்லவா?

இழந்த பணத்தை மீண்டும் பெறலாம், இழந்த பலத்தை மீண்டும் பெறலாம். ஆனால் இழந்த காலத்தை எவரும் எக்காலத்திலும் பெற முடியாது. ஆதலால் இளைஞனே, உனது காலத்தைச் சிறிதும் வீணாக்காதே. நீ உலகில் தோன்றுவது ஒரு முறையே. உனது தோற்றமும், வாய்ப்பும் சிந்தனையும் கொண்ட இன்னொருவன் இனி பிறப்பதில்லை. நீ உனது உயிரை இழப்பதற்குள் உனது முத்திரையை இவ்வுலகில் பதித்து விடு.

# ஐயாவின் கடிதம்

(வேலூர் மருத்துவமனையிலிருந்து ஆசிரியைகளுக்கு எழுதப்பட்டது)

307, M. வார்டு,
C.M.C. வேலூர்.
11.6.72

Dear Teachers,

*இங்கு நான் சௌக்கியமாக இருக்கிறேன். நாளுக்கு நாள் உடம்பு குணமடைந்து வருகிறது. இன்னும் ஒரு வாரத்தில் வந்து விடுவேன்.*

*நமது ஹாஸ்டல் ஆசிரமம் என்பதை யாரும் மறக்கலாகாது. மகாத்மாவின் ஆசிரமத்தில் எல்லா ஜாதியாரும், மதத்தாரும் இருந்தார்கள். ஆனால் அன்போடு பழகினார்கள். நான் பார்த்த போது ஒருவர் M.A., படித்தவர், செருப்பு தைத்துக் கொண்டிருந்தார். 3 அமெரிக்கர்கள் சைக்கிள்களை ரிப்பேர் செய்தார்கள். சில படித்த உயர்ந்த ஜாதிக்காரர்கள் கக்கூஸ் சுத்தம் செய்தார்கள். இதுதான் ஆசிரம வாழ்க்கை. ஓட்டல் வாழ்க்கை வேறு. ஆசிரம வாழ்க்கை வேறு. நமது ஆசிரியைகள் ஆசிரம வாழ்க்கையைப் பின்பற்றி எல்லா வேலையும் செய்ய வேண்டும். தொழிலில் இழிவு இல்லை. சோம்பல்தான் இழிவு. நீங்கள் பலர் சாரணியர்களாகவும் இருக்கிறீர்கள். எனவே, அறைகளில் அடைந்து கொள்ள வேண்டாம். தலைமையாசிரியர் சொல்லாமலேயே சமையலறை, சாப்பாட்டறை, கக்கூஸ் சுத்தத்தைக் கவனிக்க பிள்ளைகளையும் சேர்த்து குழுக்களாகப் பிரித்துக் கொள்ளுங்கள். பினைல்(Phenyl) போட்டு கழுவியிருக்கிறதா என்று பார்ப்பதில் கேவலம் இல்லை. பேன் பார்ப்பது, சிரங்கு பார்ப்பது, டியூஷன் மக்கள்களே பார்க்கலாம், ஏன் தலைமையாசிரியை அதைப் பார்க்க வேண்டும்?*



செடிகளுக்கு உரம் போடக் கற்றுக் கொள்வது, சாரணீயம். வாரம் ஒரு முறை வகுப்பறையை ஒட்டடை எடுத்து சுத்தம் செய்வது சாரணீயம். கஷ்டம்தான் சேவைக்கு அடையாளம். அன்னை தெரசா வங்காள தேசத்தில் எத்தகைய சேவை செய்கிறார் என்பதைப் படித்துப் பாருங்கள். ஏன் நாம் அதை நமதுமக்களுக்குச் செய்யக் கூடாது? கீழே கிடக்கும் சருகை ஆளுக்கு ஒன்று எடுத்தால் ஹாஸ்டலில் உள்ள 300 பேரும் 300 சருகை ஒரு விநாடியில் எடுக்கலாம். மனம் பக்குவமாக வேண்டும். சாண்டிசேரி கட்டடத்தை அழகாக வைத்துக் கொள். கொடிகளுக்குக் கயிறு கட்டி மேலே ஏற்று. தினமும் கக்கூஸ் கழுவப்பட வேண்டும். குடி தண்ணீர் பிடித்து வைக்கவும்.

சேவை, சேவை, சேவை

இது தவிர வாழ்க்கையில் வேறு பிரார்த்தனையும் இல்லை, இன்பமும் இல்லை. அமைதியாக ஆடம்பரமின்றி எல்லோரும் ஒரு குடும்பமாக பணி புரியுங்கள். உங்களுக்கு என் வாழ்த்து.

அன்புள்ள,

S. மீனாட்சி சுந்தரம்.

# IYYA'S LETTER

Erode,
31.8.1972

To

The friends and well wishers of Kalaimagal.

Friends,

All of you know how our Nilayam started 27 years ago with 77 pupils and 2 teachers, has now grownup into one of the prime institutions of Tamil Nadu.

The Services of our headmistress, the sincere and hard working staff, the public co-operation, dearptmental and government help have all contributed to this growth.

Now as I am uncertain of health, I am anxious that after me this good institution should maintain its record of all round achievement. I fear that certain elements may try to disrupt the smooth working of the Nilayam. In all cases of expediency I want you to stand by the Nilayam.

I want to inform the Public through this letter that Kalaimagal Kalvi Nilayam is now managed by a Public Trust consisting of 7 members, I am the Managing Trustee at present and after me the Headmistress and correspondent of the Nilayam, Miss. M. Muthiah, B.A., B.T., will become

the Managing Trustee also as per the Registered Trust Deed, for in the last 17 years, She has been working heart and soul for the fruition and welfare of the Nilayam. I have full faith in her efficiency and integrity. I can't find a better person more efficient, sincere, honest and devoted to the welfare of the Nilayam.

Mrs. Balambal was the Secretary, Correspondent and Headmistress from the time the Nilayam was founded in 1945 till the time of her demise in 1948.

Now I want the Nilayam to be managed entirely by ladies (teachers) in course of time. The Nilayam is a public property cent percent as no one in my family now or hereafter can claim any right in its property or management. Neither the sites have been purchased nor the buildings put up from my ancestral property for I had no ancestral property whatsoever.

I want the name "Kalaimagal Kalvi Nilayam" to be continued after me. The spiritual or religious tolerance, communal harmony and sincere devotion should prevail for ever.

**S. MEENAKSHI SUNDARAM,**
Principal and Managing Trustee.

---

# பாரதியாருடன் ஐயா

*(தொகுப்பு : டாக்டர். ஜீவானந்தம் M.B.B.S., D.A.)*

ஐயா, உயர்திரு. எஸ். மீனாட்சி சுந்தரனார் அவர்கள், பாரதியார் ஈரோடு வந்திருந்த போது அவருடன் சந்தித்துப் பெற்ற உணர்வுகளைக் கூறுதல்.

"பாரதியார் இறுதி எய்துவதற்கு 1, 2 மாதத்திற்கு முன்பு ஈரோட்டிற்கு வந்திருந்தார். அப்பொழுது ஒரு நாள் முழுவதும் அவருடன் தங்கி இருக்கும் வாய்ப்பு எனக்கு கிடைத்தது. வாசகசாலை ஆண்டு விழாவிற்கு அவர் வந்திருந்தார். அதன் தலைவர் தியாகி. தங்கப் பெருமாள் பிள்ளை அவர்கள் வீட்டில் தங்கி இருந்தார். காலையில், 8, 8 1/2 மணிக்கெல்லாம் சென்றிருந்தோம். நானும் இன்னொருவர் மட்டும் சென்றிருந்தோம். அவர் ஹாலில் அவருக்காக நாங்கள் உட்கார்ந்திருந்தோம். அவர் வந்தார். சாதாரணமாக நாம் படத்தில் பார்ப்பது போல், தலையில் முண்டாசு, ஒரு open coat, உள்ளே ஒரு மப்ளர், முறுக்கி விட்ட மீசை அதே மாதிரி தான் இருந்தார். இரண்டு மணி நேரம் எங்களுடன் பேசி இருப்பார். பாடல் முழுவதையும், முக்கியமான பாடல்களையும் எங்களுக்குப் பாடி காண்பித்தார். அவ்வளவு நேரமும் அவர் வளைந்து உட்கார்ந்ததை நான் பார்த்ததே இல்லை. அப்படியே நிமிர்ந்து பாடிக் கொண்டு, பேசிக் கொண்டு ஆறு அடி வித்தியாசத்தில் இருந்தவர், குதித்து, குதித்து 2 அடி பக்கத்தில் வந்து விட்டார். அத்தனை உணர்ச்சியோடு பாடுவதும் பேசுவதும் இருந்தது. அவர் பாடல்களை அவரே பாடுவதைக் கேட்டால் தான், பாரதியார் அந்தக் காலத்தில் எப்படி உணர்ச்சி ஊட்ட முடிந்தது என்று தெரியும். சுத்தமான உரத்த குரலில் பாடுவது அழகாக, நன்றாக, கம்பீரமாக இருக்கும்.

அந்தக் காலத்தில் பாரதியார் பாடலில் நாட்டுப்பாடல், முரசு, பாப்பாப் பாடல் எல்லாம் சேர்ந்து ஒரு அணா விலையில் நெல்லையப்பப் பிள்ளை வெளியீடாக வந்தது. இவ்வளவு அற்புதமான பாடல்களாக இருந்ததால் நாங்கள் பாடிப் பாடிப் பழகினோம். இந்தப் பாட்டின் தலைவர் பாடினவரே வந்தார் என்கின்ற போது அவர் பாடிய பாமாலை அவர் வாய் மூலமாக பாடக் கேட்கும் ஆசையில் அவரைப் பாடச் சொன்னோம். சுமார் இரண்டு மணி நேரம் பாடினார். (அப்பொழுதெல்லாம் இந்தப் பாடல்கள் புத்தகமாக வெளிவரவில்லை) டிரங் பெட்டியிலிருந்து நீளநீளமான புத்தகங்களில் எழுதி வைத்திருந்தார். "இவைகள் எல்லாம் புத்தகமாக வெளிவர வேண்டும் என்று எனக்கு ஆசை.

நூறு நூறு ரூபாய் Share Capital கொடுத்தால் அதைக் கொண்டு இதையெல்லாம் Publish பண்ணலாம் என்று நினைக்கிறேன்'' என்றார். ஒருத்தர் கூட அதற்கு Share போடவில்லை. அந்தக் காலத்தில் அதாவது அவர் வாழ்ந்த காலத்தில் அவருக்கு இருந்த மதிப்பு அவ்வளவுதான். அவர் 'நாட்டைப் பற்றி பாடின பாடல்'. 'ஜெயமுண்டு பயமில்லை மனமே'. 'வாழ்க வாழ்க' என்ற பாட்டும் பாடினார். இந்தக் காலத்தில் அதற்கு எல்லாம் என்ன என்னவோ இராகத்தைப் போட்டு, மெட்டுப் போட்டு பாடுவதால் அந்தப் பாட்டின் உடம்பைப் பார்த்துதான் ஆனந்தப் படக் கூடிய நிலை இருக்கிறது. ஆனால் அவர் பாடினால் அந்தப் பாட்டில் உயிர் துடிப்பு இருக்கக் கூடிய அளவிற்கு பாடிக் காட்டுவார். நான் அதற்குப் பிறகு ஒத்துழையாமை இயக்கத்தில் இருந்த போது நான் தான் மேடையில் இவருடைய பாடலை நன்றாகப் பாடுவேன். பாடலைக் கேட்டுக் கேட்டு அந்தப் பாடலில் அது மாதிரி உணர்ச்சியும் ஊட்ட வேண்டும் என்ற எண்ணம் வரும். 'ஜெயமுண்டு பயமில்லை', 'அச்சமில்லை அச்சமில்லை' என்ற பாடல்கள் எங்களுக்கு War Song மாதிரி பாடிக் கொண்டு அந்த இயக்கத்தில் நாங்கள் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறோம்.

# திருமதி. பாலாம்பாளுக்கு அஞ்சலி

## பண்ணிலே இசையாய்...

1. பாலும் தேனுமாய் உள்ளமதில் கலந்திட்ட
   பாலாம் பாள்தாயே! பணிகின்றோம்! உம்பாதம்
   கோலில்லாக் குருடனாய்த் தவிக்கின்ற வேளையில்
   கோலாம் கல்வியைப் பெற்றிடவே அடிகோலினாய்

2. உன்னத உள்ளமே உதித்தது உன்னால்!
   பண்ணிலே இசையாய் கலந்திட்டாய் இக்கோயிலில்
   பள்ளத்தில் பாயும் வெள்ளத்தைப் போலவே
   கள்ளமில்லா உள்ளங்கள் கூடினவே கற்பதற்கே!

3. கற்றறிந்த சான்றோர் சாற்றினார் அன்றே
   தொட்டது மணக்கும், துலங்கும் என்றே
   தொட்டது மணந்தது, பட்டது துலங்கியது;
   பட்டம் பெற்றிடவே குவிந்தன சிட்டுகள்

4. பெண்கல்வி போற்றிட்ட பெருந்தகை ஐயாவின்
   எண்ணத்தைச் செயலாக்க அடித்தளமாய் அமைந்திட்ட தாயே!
   மண்ணுக்குள் வைரமாய் மறைந்திட்ட போதிலும்
   கண்ணாகப் போற்றுகிறேன்! காத்திடுவாய் எம்தாயே!

5. கிளைகளுடன் தழைத்திட்ட கலைக்கோயில் இதனையே
   பிள்ளையாய்க் காத்திட வேண்டுகிறோம் உம்மூசியை!
   கார்கால மேகமாய் காத்திடுவாய் இக்கோயிலை
   பார்போற்ற வாழ்த்திடுவாய் என்றென்றும் இப்பள்ளியை!

செல்வி. பாலசரஸ்வதி
*தமிழாசிரியை*

# எம் அன்னை செல்வி M. முத்தையா !

எஸ். கவிதா, X - D
எஸ். இரஞ்சனி VIII - C

பார் புகழும் தமிழகத்தில்
பெருமை மிக்க ஈரோட்டில்
படிப்பறியாப் பெண் குழந்தைகட்கு
பிடிப்பாய் இருந்தவர் எம் அன்னை!
களைப் பில்லாத்தும் பணியாலே
கலைமகள் தோணி கொண்டே
கல்விப்பயணம் செய்யும் மாணவியர்க்குக்
காலமெல்லாம் துடுப்பாய்இருந்தவர் எம் அன்னை!
இருமொழிச் சொற்கொண்டல் ஐயாவுக்குப் பின்
இளமையிலேயே பள்ளி நிர்வாகியாகி
கற்பகவிருட்சமாய் கல்வி வளர்வதற்குக்
கடமை ஆற்றியவர் எம் அன்னை!
மாணவிகள் அனைவரும் பள்ளி இறுதித் தேர்வில்
மதிப்பாய் நூறுசதம் தொடர்ந்து பெற்றிடவே
மணவிழா காணாமலே நாற்பதாண்டு
முயன்று உழைத்தவர் எம்அன்னை!
மாநில நல்லாசிரியர் விருதென்ன
தேசிய நல்லாசிரியர் விருதென்ன
பாரில் கல்விச் சாதனை புரிந்தமைக்குப்
பாங்காய்ப் பரிசுகள் பல பெற்றவர் எம்அன்னை!
தொல்லுலகம் வியக்கும் வண்ணம் எம்பள்ளியில்
தொல்பொருள் ஆய்வுக்கூடம் அமைத்து
ஈடில்லா பொன்மனச் செம்மலைத் திறக்க வைத்து
நாடெல்லாம் நற்பெயர் கிடைக்கச் செய்தவர் எம்அன்னை!
பொன்விழா கண்ட கலைமகள் பள்ளி
வைரவிழா காண வாழ்த்துக்கள்!
மங்காப் புகழ்பெற்று மேலும் உயர்வதற்குத்
தூண்டா மணி விளக்காய் இருப்பார் எம்அன்னை!

## அன்னையே...

## காக்கும் கடவுளாய் என்றென்றும் இருப்பீர்!

திருமதி. சக்குபாய், தமிழாசிரியை

அம்மா எனநா இசைத்தால்
அகிலமே பூபாளம் பாடும்!
அம்மா எனஉளம் துதித்தால்
ஆண்டவனின் அருள்வடிவம் தோன்றும்!
அம்மா எனவாய் ஒலித்தால்
ஆருயிரும் அன்பாலே சிலிர்க்கும்!
ஈரோடைக் கலைமகளின் அன்னையோ
இத்தனையும் பீறிட்டெழும் இன்பஊற்று!
பத்துத் திங்கள் சுமந்த தாய்க்கோ
பாரினில் ஓரிரு குழந்தைகள்
பற்றோடு தன்நெஞ்சில் சுமந்த
அன்னைக்கோ பல்லாயிரம் குழந்தைகள்..!
தனக்கென வாழாத் தொண்டுநெறியால்
துணையேதும் தேடாத் தூயவர்காண்!
வாய்ச்சொல்லில் வீராய், வாழ்நாளில்
நீர்க்குமிழ் தோற்றமாய் மறைவோரில்
வாய்மையின் மறுவடிவாய் - யாவரும்
வணங்கியே ஏத்தும் தோற்றம்!
கலைமகளின் தவப்புதல்வி அம்மா
ஆய கலைகளுக்கோர் பிறப்பிடம்!
மலைமகளின் ஆற்றலை மலைபோல
கவசமெனக் கொண்டே வாழ்ந்தார்
கண்டிப்பு கண்களில் காட்ட, இளகிய
நெஞ்சக்குள் ஈரம் சுரக்கும்
இறைஉணர்வு என்ற பண்புஅவர்
இதயத்தின் துடிப்பாக விளங்கும்!
காலந் தவறாத செயல்கண்டு
காலதேவதையே கைகூப்பி வணங்கும்!
பெண்சிங்கமெனக் குரல் ஒலித்தாலும்
பேச்செல்லாம் பெண்கல்வி எதிரொலிக்கும்
சீரிய நெறிகளைச் சிந்தித்தே
செயல்படுத்துவதில் அவரோர் சாணக்கியர்!
காட்சியில் மட்டுமல்ல கம்பீரம்!
ஆட்சித்திறமையில் அன்னை இந்திரா!
பைந்தமிழ்ப் பாவலன் பாரதியின்
கனவுப் பூக்களின் நனவுத்தோற்றம்!
பல்லாண்டு பணிபுரிந்த தொண்டிற்குப்
பாரோர் போற்றும் தேசியவிருதொடு
பல்துறை வெற்றியின் விருதுகள்
தாமேவிரும்பி அடைந்தன அன்னையை!
தனிச்சிறப்புடனே தனித்தென்றும் விளங்க
அம்மா! அன்றும் இன்றும்
என்றும் எம்மோடு இருந்து
எமக்குத் துணையாய் வழிகாட்டுவீராக!
அன்பொளிர் விழிகள் நோக்கில்
அருள்மழை பொழியச் செய்து
நெஞ்சில் நிலைத்திடும் அம்மா! நீவிர்
காக்கும் கடவுளாய் என்றென்றும் இருப்பீர்!

# அன்னைக்குப் புகழாரம்

*தொகுத்து அளிப்பவர்:*
**Mrs. Felicia Joseph M.A., M.Ed.**

நாற்பதாண்டுகள் கல்விப் பணிக்கெனவும், கலைமகளின் வளர்ச்சிக்கெனவும், உழைத்த எம் அன்னை செல்வி. முத்தையா அவர்கள் 1994 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 30 ஆம் நாள் மாலை 3 மணிக்கு இறைவனடி சேர்ந்தார்கள். அன்னாருக்குப் புகழாரம் சூட்டியுள்ளனர் அவருடன் நெருங்கிப் பழகிய பலதரப்பட்ட பெரியோர்கள். 'அம்மாவின்' மறைவால் வருந்தி நிற்கும் எமது விழிநீர் துடைக்கும் படைப்புகள் இவை. நீங்களும் படித்துப் பாருங்கள்.

*அம்மாவின் ஆசிரியை* திருமதி. ஜீவரத்தினம் பீட்டர்ஸ் *எழுதுகிறார்*



So quietly came the call
Her end shocked us all,
But to us she was only lent,
To her heavenly Home she has gone,
It is a bitter shock and grief severe,
To part with May we loved so dear,
Our Loss is great, we should not complain,
For at Heaven's gate we'll meet again,

A light from our place is gone,
A Voice we loved is stilled,
A smile we cherished is missed.
A place is vacant at K.K.N.
Which never can be filled,
Till memory fades and life departs,
May, my child, live dear in my heart.

**Our present correspondent Mrs. Mangalavathy says,**

**Living in memory's garden**



Our Beloved Amma - whom we all loved so dearly - 30 years I spent with her inthe 'kalaimagal' campus. I laughed with her, wept with her, shared with her, prayed with her, planned with her, executed the plans successfully with her. I cherish every moment I spent with her.

Our unforgettable educational tours to Simla, Darjeeling, Ajanta, Ellora, Mount Abu, Bombay, Goa and Ceylon stay ever green in my mind, her child-like enthusiasm, while enjoying the beauty of Kashmir Lakes, climbing up the Himalayan Ranges breathlessly and collecting valuable things

for our Archaelogical Museum. Her sacrifice wrought miracles in 'Kalaimagal' Campus - the thatched sheds disappeared giving place to three - storeyed buildings. New projects and plans were implemented. 'Kalaimagal' wore a new look attracting nation - wide visitors - Awards adorned her. Felicitations were showered on her. A full life she led, though single with thousands of children around her adding charm to her life.

Our 'Amma' still stays with us filling the entire campus with her magnificent presence. Not a single day passes without remembering her and feeling her presence.

Tear drops shed with love from thousands of eyes drenched the 'Kalaimagal' soil on 30th August, 1994, when she stepped into the Heavenly Gates leaving us gazing behind her with tear-filled eyes with wonder and awe at her sudden call, leaving her mantle to fall on me to bear the burden borne by her for 40 long years.

'Should you go first and we remain,<br>
To walkthe road alone?<br>
We will live in memory's garden, dear Amma,<br>
With happy days we've known;<br>
The memory of your helping hand,<br>
Will buoy me on with hope<br>
Memory is one gift of God,<br>
That death cannot destroy'

## HELPING HAND

**By Tmt. INDRANI RAJADURAI**
Dy. Director - Resource Mobilisation
Helpage, India

Madam Muthiah whom I was calling affectionately as 'Aunty' is a great model for me. I know her for the past twenty two years and have moved with her very closely. When I think of aunty, 'Orderliness' is the word that comes to my mind. Any task she took whether big or small, it would be performed in an orderly manner. She was a lady of 'Principles' which she was upholding in all situations. Though she was a strict disciplinarian, with her pleasant smile, she had won the co-operation of her colleagues and friends. She would complete and perfect any task undertaken by her.

Help Age India was a beneficiary through her support in the 'Sponsored Walk' programme conducted in Kalaimagal Kalvi Nilayam in the year 1979. With her support and co-operation, the school collected Rs. 83,931/- for Help Age India for the cause and care of the elderly. Help Age India sponsored - walk programme and the Prize Distribution Function were organised very meticulously under the dynamic leadership of dear Aunty.

Aunty Muthiah was a God-fearing person and respected all religions. This was very clear from the morning Assembly Prayers in the school.

She had always lived and worked for the uplift of the poor and downtrodden. It was her ambition that the school should be top in all school activities.

Wishing the school all the best in its future endeavours.

முன்னாள் மாணவி **Dr. அம்சா சுப்ரமணியம் M.B.B.S., D.G.O.,** எழுதுகிறார்

## அம்மா - பாரதி கண்ட கனவின் வடிவம்

*எளிமையின் வலிமை கண்டாய்*
*ஏற்றமிகு வாழ்வு கொண்டாய்*
*உம்மிடம் வந்தோர்க்கு*
*உதவிட மனம் கொண்டாய்*
*கடமையை உணர்த்திட்டாய்*
*கண்ணியத்தைக் கடைப்பிடித்தாய்*
*கற்றவர்க்கு வழி சொன்னாய்*
*கல்லாதார்க்கு மொழி சொன்னாய்*
*அருளுக்குப் பொருள்சொன்னாய்*
*அன்பிற்குத் தலை பணிந்தாய்*
*நன்றிக்கு உரை சொன்னாய்*
*நட்பிற்கு இலக்கணமானாய்*
*மாண்புமிகு பெண்ணானாய்*
*மங்கையருள் மாணிக்கமானாய்*
*அம்மா நின் வழிகண்டு*
*நான் வாழ வழி செய்தாய்*
*நன்றி! நன்றி! நன்றி.*

இன்றைய ஆசிரியை **திருமதி. ரேச்சல் பிளாரன்ஸ்** கூறுவது

## My Beloved Amma

The female lioness is in slumber deep.
Don't disturb her even with a peep.
The flitting steps of hers blushed even the clocks
We'd really run while she walks
The strict Disciplinarian is no more
Has left us with hearts full of woe.
Our school's glory was her sole ambition
Struggled she for achieving recognition
Let us sing in unison of heart
For the soul that has departed

# அம்மா ஓர் அறிவுத் திறவுகோல்

திருமதி. நா. பிரேமாவதி M.A., B.Ed.,

தென்மொழியும், ஆங்கிலமும் சேரக் கற்ற
சிந்தனையின் சொற்கொண்டல் 'ஐயா' சொன்ன
பொன்மொழிகள், புதுமொழிகள் இவற்றிற் கெல்லாம்
புத்தகமாய், கல்வெட்டாய் நிழற்படமாய் ஆனாயம்மா!

அலைத்துடிப்பும், சுறுசுறுப்பும் உழைப்பும் கொண்டே
அவர் வகுத்த வழியினிலே சென்றீர் அம்மா
நுண்மதியால் நீர் தொகுத்த இக்கல்விப் பொழிலுக்கு
வெள்ளிவிழா, பொன்விழாவென ஐம்பதாண்டுகள்
புதுமைப்பெண்ணாய்ப் பள்ளிக்குத் தலைமை தாங்கி
பொறுப்பேற்று நடத்திய நுண்திறம் கண்டு
மதிநலத்தை, மனநலத்தைப் பாடாதகவியும் உண்டோ!
ஆலமரமாய், புகழ்கொண்டு நீவிர் நிலைத்திருக்க
இருநூறாய், ஆறாயிரமாய் ஆசிரியைகளும் மாணவிகளும் விழுதுகளாக
புராணத்தில் கலைமகளுக்குத் தாயுமில்லை, தந்தையுமில்லை
இந்தக் கலைமகளுக்கோ தாயுமானாய் தந்தையுமானாய்
பொன்விழாச் செல்வியே அம்மா! பெண்ணினம்
பெருமை கொள்ளும் மாணிக்கப் பாலன்றோ நீவிர்
முத்தின் நிறம் வெளுப்பு, நம் முத்தையாவின் மனமோ வெளுப்பு
ஐம்பதாண்டுகள் தொடர்ந்து பொன்விழாக்காணும் இப்பள்ளிக்கு
வெற்றிவிதை தூவிநீவிர் வளர்த்த செய்தி கேட்டு
விரல் மூக்கில் வையாதோர் வையகத்தில் இல்லை
கண்ணிமைபோல் மகளிர் நலம்காத்து காசினிக்கே
வழிகாட்டும் பள்ளியாக கலைமகளை ஆக்கிவைத்த
மாண்புடைய முத்தையா நீரென்றும் வாழ்க
அள்ளும் கலை அறுபத்திநான்கு, விளையாட்டு, சாரணியம்
நூறுசதம் தேர்ச்சி, தொல்பொருள் பெருகிவிட
வழியமைத்த அம்மா 'நீவிர்' நீடுவாழ்க
தலைநிறையப் புகழ்மலரைச் சூடிக் கொண்டு
வானுலகம் சென்றீர் அம்மா கற்பகமலருக்காக

[illegible] உயர்நிலைப் பள்ளி முன்னாள் தலைமையாசிரியர் திரு. குழந்தைசாமி அவர்களின் கருத்து

# OUR GREAT AMMA

It is with a heart overflowing with gratitude mingled with brotherly affection that I venture to pen these few lines in the name of Almighty whom I pray fervently to inspire me all through. I avail myself of this golden opportunity during the Golden Jubilee Celebrations of the Kalaimagal Kalvi Nilayam, Erode.

For nearly three decades I was closely connected with our great Amma and my dear sister in Christ, Selvi M. Muthiah, of happy memory. With a humble beginning as an ordinary B.T. teacher she rose to the high level of an earnest and enthusiastic Headmistress and Correspondent of the K.K. Nilayam, Erode. All through her long service, shehad laid all her talents and skills on the altar of educational service in obtaining for her pupils a diligent and obedient spirit, quickness of apprehension, capacity of retaining their knowledge gained, and above all expressing themselves with clarity and persuasion. Of course, this was the secret device for securing without interruption cent percent passes in the public examinations.

As an exemplary and devout Christian she had a lion's share in organising annual Christian conventions and revival meetings addressed by preachers and pastors noted for their unremitting zeal and untiring service to souls by day and night.

I can assure the Kalaimagal inmates that by our Amma's constant intercession to God they will prepare themselves to be worthy of celebrating the Platinum Jubilee also after reaching the zenith of their glory in the educational field.

Let me place this article at the feet of my revered sister and conclude it with this short fervent and daily Prayer.

"Eternal rest give unto her, O Lord, and let perpetual light shine upon her. Amen".

அம்மாவுடன் இணைந்து வாழ்ந்த ஆசிரியை திருமதி. M. S. சரோஜா கூறுவது

## என் இனிய அன்னை :



நம் அன்னையுடன் நான் சுமார் நாற்பது ஆண்டுகள் நெருக்கமாக பழகியுள்ளேன். 1955ஆம் ஆண்டிலிருந்தே அவர்களுக்கு எங்கள் குடும்பத்துடன் பழக்கம். வீட்டில் வசித்த நாட்களைவிட அவர்களுடன் விடுதியில் கழித்த நாட்கள் தான் அதிகம். எங்கள் வீட்டில் எல்லோருக்கும் அவர்களைப் பிடிக்கும்.

பழகுவதற்கு மிக இனிமையானவர். மிகவும் சுறுசுறுப்பானவர் நல்ல தைரியசாலி. அன்பு நிறைந்தவர். ஆனால் மிகவும் கண்டிப்பானவர். இரும்பு குணம் மிகுந்தவர். எல்லோரையும் ஈர்க்கும் காந்தசக்தி உடையவர். அவர்களுக்குக் கடவுளிடம் ஈடுபாடு அதிகம். ஜெபம் செய்யாமல் எந்த வேலையும் செய்ய மாட்டார். தினமும் காலை 5 மணிக்கு எழுந்தவுடன் ஜெபம் செய்த பிறகுதான் மற்ற வேலைகளைச் செய்ய ஆரம்பிப்பார். அதேபோல் ஒவ்வொருவரும் அவரவர் மத பிரார்த்தனைகளைச் செய்ய வேண்டுமென்று அடிக்கடி கூறுவார். நம்பிக்கையுடன் பிரார்த்தனை செய்தால் கடவுள் நமக்கு உதவி செய்வார் என்று கூறுவார். அவர்களிடமிருந்து தான் பிரார்த்தனையின் அத்தியாவசியத்தைத் தெரிந்து கொண்டு நானும் பின்பற்றலானேன்.

அடுத்தபடி அவர்கள் விரும்புவது நேரந்தவறாமை. குறித்த நேரத்தில் அந்தந்த வேலைகளைச் செய்ய வேண்டும். வகுப்பிற்குச் செல்லுதல், கூட்டங்களுக்குச் செல்லுதல், விழா ஆரம்பித்தல் ஆகியவற்றில் மிகவும் கவனமாகவும் கண்டிப்பாகவும் இருப்பார். நேரம் தாழ்த்தினால் கொஞ்சங்கூட பொறுத்துக் கொள்ள மாட்டார். தான் Punctual ஆக இருப்பது போல் மற்றவர்களும் இருக்க வேண்டுமென்று விரும்புவார். கண்காணி இல்லாமல் எல்லா வேலைகளும் சரிவர நடக்க வேண்டுமென்று விரும்புவார். மேலும் அவர் ஒரு சிறந்த பேச்சாளர். எல்லோரையும் சீக்கிரத்தில் நம்பி விடுவார்.

200 ஆசிரியைகளின் குடும்ப நிலைமையைத் தெரிந்து வைத்துக் கொண்டு அதற்கேற்ப உதவி செய்வார். ஆசிரியைகளின் வீடுகளில் நடக்கும் நல்ல விஷயங்களுக்கும், துக்க விஷயங்களுக்கும் மற்ற ஆசிரியர்களுடன் சென்று பங்கு கொள்வார். தேவையான உதவிகளையும் செய்வார். படிப்பு வித்தியாசம் பாராமல் எல்லோருடன் அன்பாகப் பழகுவார்.

என் பெற்றோரின் மறைவுக்குப் பிறகு அவர்கள்தான் எனக்கு எல்லாமாக இருந்து உதவி புரிந்தார். என் நல்வாழ்வுக்காக அநேக உதவிகளைச் செய்தார். என்னுடன் எவ்வளவு அன்பாகப் பழகினாலும் பள்ளி வேலை விஷயத்தில் மிகவும் கண்டிப்பாக இருப்பார். சிறிதளவும் இரக்கம் காட்ட மாட்டார்.

பள்ளிக் கூடத்தின் வளர்ச்சியே தன் வாழ்க்கையின் இலட்சியமென்று கருதி வாழ்ந்தார். அவர்களின் இடைவிடா உழைப்பினால்தான் அன்று சோளக்காடாக இருந்த இடமும், மரஞ்செடி, கொடிகளாக இருந்த இடமும் இன்று மாடிக்கட்டிடங்களாக மாறியுள்ளன. அவர்கள் மேற்பார்வையிலேதான் எல்லாக் கட்டடங்களும் கட்டப் பட்டுள்ளன. இன்று மாண்டிசோரி வகுப்பு முதல் பன்னிரெண்டாம் வகுப்புகள் வரை எல்லா வசதிகளுடனும் கூடிய வகுப்பறைகளில் குழந்தைகள் படித்து வருகிறார்களென்றால் அதன் பெருமை நம் அம்மாவையே சாரும். பள்ளியின் ஒழுக்கம், கட்டுப்பாடு, படிப்பு, விளையாட்டு, எல்லாவற்றிலும் நம்பள்ளி தான் தலை சிறந்து, முதன்மையாக இருக்க வேண்டுமென்று விரும்பினார். அவ்விருப்பத்தை எனது சகோதர ஆசிரியைகள் செயலாக்கி வெற்றியும் கண்டு வருவது பாராட்டத்தக்கது.

1994 ஆம் ஆண்டு ஜுன் மாதம் 30-ஆம் தேதி பிற்பகல் நான் பள்ளியிலிருந்து ஓய்வு பெற்றேன். ஆனால் அம்மா 1994 ஆம் வருடம் ஆகஸ்ட் மாதம் 30-ஆம் தேதி பிற்பகல் இவ்வுலகத்திலிருந்தே ஓய்வு பெற்று விட்டார். 1955-ஆம் ஆண்டிலிருந்து பள்ளி முழுவதும் சுற்றி வந்து சிம்ம கர்ஜனை செய்த பெண்சிங்கம் 1994 ஆகஸ்ட் 30-ல் உறங்கிவிட்டது. ஆம் காலன் அவர்களுக்கு ஓய்வு கொடுக்க எங்களிடமிருந்து நிரந்தரமாகப் பிரித்து விட்டான். எங்களுக்கெல்லாம் இது மீளாத்துயரம்தான்.

---

**From Our Visitors' Book...**

Dr. R. Subbiah,
Vice-Chancellor,
Bharathiyar University,
**Coimbatore.**

*It is rare opportunity of my life to visit the rare palm leave manuscripts and archaeological collections. The collections are very rare ones. Many research workers can spend years and years on these collections and write about our ancient culture.*

*The School is well managed. The students are well disciplined and the young faces are bright and full of delight. I am very confident that the children coming out of this school have a prosperous future and that they will be assets to the nation. I offer my congratulations and appreciation to the Headmistress and her Co-teachers for taking steps to educate these young ones. I pray to God to shower his choicest blessings for the prosperity of the school and continuance of doing such good work.*

*My congratulations and appreciation to the management for all encouragement for the institution.*

*(Sd.) Dr. Subbiah,*
*7/8/1982.*

# எம் அன்னை

*இன்றைய மாணவி* P. மோகனாம்பிகை (X - Matric.) *கூறுகிறார்*

''ஆசிரியர் பணி அறப்பணி; அதனை நாட்டிற்கே அர்ப்பணி'' என்ற சொல்லுக்கு இலக்கணம் வகுத்தவர் எம் அன்னை. கல்வி என்னும் அணையா தீபத்தை ஏற்றி வைத்தவர். மிகவும் அன்பானவர்.

''தான் உண்ட நீர் அதனைப் பன்மடங்கு பெருக்கிப், பார் மகிழத்தருவதற்கே சூல்கொண்டு உலவுவது மேகம்'' என்பது போல் தான் கற்ற கல்வியினைத் தன்னோடு மடிந்து விடாமல் யாவரும் பயன்படும் வகையில் கல்விப் பணி ஆற்றினார். காலம் தவறாமையும், கண்டிப்பும் அவருடைய தகைசான்ற பண்புகள்.

ஈரோட்டுப் பெருநகரில் பெண் கல்வியைப் பேணிக் காக்கத் தன் வாழ் நாள் முழுமையும் அர்ப்பணித்த அம்மா, அவர் தம் சீரிய முயற்சியால் இக்கல்விக் கோயில் பல பெண்களுடைய அறிவு விளக்கிற்குத் திரியாகத் திகழ்ந்தவர்.

அவரை மாணவிகள் 'அம்மா' என்று அன்புடன் அழைப்பதன் மூலம் அவருடைய அன்பான குணத்தை அறியலாம். கல்விக்கோரு ஆலயமாகத் திகழும் எம் பள்ளியின் முதன்மைத் தாய் எம் அன்னை.



திரு. பொன்னம்பலம் M.A., M.G.L., பெற்றோர் சார்பில் வழங்கியது

## The Everlasting Light and Spirit of K.K.N.

Our beloved Amma was known to me for more than a decade from the year 1982 onwords. Itwas on 4th December 1983, I had the privilege of meeting her in person in her residence at 'K.K.N. ERODE. Even at the very first sight I was very much impressed by the way she welcomed me and talked to me. Though I was a stranger to her then, she showed a motherly love and affection towards me. Still I remember that incident and now I recall my first meeting with her in the year 1983. I find nowards to express my feelings of gratitude to her for the motherly affection she had shown to me and the moral support she had given to me. It will not be out of place, If I say that it was 'Amma' who helped me to gain a real meaning and shape to my life in this world. She lit the light of good hope and courage in all those who loved and respected her.

குழந்தைப் பள்ளி மாணவி அம்சா சங்கரநாயகி (V 'A) எழுதுகிறார்

### 'உயிர் எழுத்தில் அம்மா'

அன்பு நிறைந்த அம்மா
ஆசை நிறைந்த அம்மா
இனிமை நிறைந்த அம்மா
ஈடில்லாத எங்கள் அம்மா
உண்மை விரும்பிய அம்மா
ஊக்கம் அளித்த அம்மா
எல்லோரும் விரும்பிய அம்மா
ஏங்கி நிற்கிறோம் அம்மா
ஐயம் நீக்கிய அம்மா
ஒழுக்கம் விரும்பிய அம்மா
ஓதியே உயர்ந்திட்ட அம்மா
ஔவையெனவே வாழ்ந்த அம்மா
அம்மா! அம்மா! அம்மா!



# From Amma's Diary

It was in 1955 April on Tamil New Year's Day, I stepped into this Dear Kalaimagal for an interview.

My work started on the 6th morning in June, 1955. I never knew anything about Iyyah, neither did I work for money. From the firstday my aim was to build up the institution. There were 22 children in the hostel with 5 teachers, Miss. Kamalam, Mrs. V. Kalpaham, Miss. S. Sakunthala & Miss. M.S. Saroja were with me. I wanted to help Iyyah in building up this institution. Why I decided to continue. I knew the desire of Iyyah in raising this into a full-fledged High School and his love for this institution.

When the keys of Kalaimagal were handed over to me, the debt for petrol bunk alone was Rs. 3000/- I took the keys from Iyyah with a smiling face. I took up this work as a challenge. On Sundays, Kamalam and I never took rest but were giving practice for mass drill to children. In the first year itself, I took out the children in the uniform in procession on the 15th Aug. 1955.

I worked for God. On Sundays I used to clean the heads of hostel children. Didn't Christ say that only a patient needs a doctor? My hostel children were without a shepherd and without a mother to take care of them. I wanted to be with the hostel kids and do my best for them. The faith I had in God sustained me and helped me to run the Nilayam. Hundreds of miracles have happened in the history of 'Kalaimagal .

We had no money in the school for buying a projector. We did not even have money for buying a box of chalk. I sold my jewels for paying my staff. No one came forward to help the institution. I used to get up at 5 O' clock in the morning. I read my Bible at 6 A.M. I used to go to the terrace for prayer and meditation. That prayer corner in the terrace was my refuge for 18 years.

I was clingng to God and I have achieved many things through prayer. Whenever I was depressed in mind, worried about the school, I used to go to the Brough Memorial Church with my teachers and pray at the altar. I was sure to receive the answer.

Iyyah made 'Kalaimgal' a Public Trust and made me the Correspondent on 18th January 1970. He announced it in the staff meeting. I used to take classes at 7.30 A.M. for S.S.L.C. but I didnot feel tired in the evening. This was due to my deep desire for service and my deep love for the children. Iyyah left us on 14th May 1973, at 7.05 A.M. He had written in his letter, 'Even if it comes to the question of life and death, die inside the compound but don't desert my teachers and children and run away in your own interest'.

I nurtured the sapling planted by Iyyah. I would like to change this 'Kalaigamal' as a flowering garden.

After Iyyah's death, Norman Vincent Peale's books strengthened me. One should have child-like faith in God till death. I always had in mind that, I am not alone, God is with me. I used to get my battery charged from my Saviour. I had not gone to bed without finishing my work.

In 1974, I visited 22 schools in America. The Educational system there is wonderful. In 1985, I received National award on 5th September. My teachers and children had arranged for a function to felicitate me. God had wrought miracles in my life.

# வழிகாட்டும் விழிகள்

வை. பத்மினி,
*முன்னாள் மாணவி, இந்நாள் ஆசிரியை*

ஆயிரமாயிரம் மாணவிகளின் சிந்தனைக்கு விருந்தாய் அமைந்து அவர்களைச் செம்மைப்படுத்திச் சீரிய வழிகாட்டிய பெருமைக்குரியவை எங்களின் அன்பு அன்னை தாளாளர் திருமதி. ச. மங்களவதி எம்.ஏ., எம்.எட்., அவர்களின் அருள் விழிகள் ஆகும்.

அவர், காட்டாற்று வெள்ளமெனப் பொங்கிப் பெருகிய எங்கள் ஆற்றலை நல்வழிப்படுத்தியவர். கணித ஏடுகளை அழகுடனும் பாங்குடனும் பேணிக்காக்கும் முறையைப் பயிற்றுவித்தவர்; சிறு செயலையும் நேர்த்தியாகச் செய்யப் பழக்கியவர். இறைவன் தாள் பணிதல், மனித நேயம், காலத்தைப் பொன்னெனப் போற்றுதல், பயனுடைய இன்சொல்கூறல், பெரியாரைத் துணைக்கோடல், உயிரினும் ஒழுக்கத்தைப் பேணல் என்பனவற்றை அவர் கடைப்பிடித்தமையால் அந்நன்னெறிகள் எங்களின் நெஞ்சங்களில் அருகுபோல் வேரோடி ஆல்போல் தழைத்தன.

அவர் விரைந்து நடந்து வரும் காட்சி வகுப்பறையில் அமர்ந்திருக்கும் எங்கள் வினை வேகத்தைத் தூண்டிவிடும், அறையின் அமைதியை அதிகப்படுத்தும். அவரது எளியதோற்றம் கடமையின் உருவமாய், கட்டுப்பாட்டின் விளக்கமாய் இப்படித்தான் வாழ வேண்டும் எனும் ஆர்வத்தை என்றும் நிலைநிறுத்தும்.



ஆசானுக்கு ஆசானாய் விளங்கும் அவர் கற்பிப்பனவற்றைக் கசடற கற்பித்தல், எளிய முறையில் எடுத்துக்கூறுதல், மிகவும் பின்தங்கிய மாணவியரின் நினைவிலும் பசுமரத்தாணி எனப் பதிய வைத்தல் ஆகியவற்றைத் தன் முப்பத்தொரு வருட ஆசிரியப் பணிக்காலத்தில் செய்து காட்டியவர். பிரார்த்தனை என்பது இறைவனுடன் உரையாடுவது என்று எளிய விளக்கம் தருபவர். கூட்டுப் பிரார்த்தனையின் வலிமைக்கு நல்லதொரு சான்று கலைமகளின் பெயர் தாங்கி நிற்கும் இப்பள்ளியின் வளர்ச்சி என்பவர். தரணியில் தன்னை உயர்த்தியவர், தான் இமைப்பொழுதும் மறவாமல் துதிக்கும் கடவுள் என்பார்.

கடவுளின் பணிக்கெனத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட இவரது பணிகள் எண்ணிலடங்காதவையாகும். எங்கெங்கு மாணவியரைத் துன்பம் வாட்டுகின்றதோ அங்கெல்லாம் அவர்கள்தம் துயர்துடைக்க நீளும் இவர்தம் கரங்கள். கற்றலில் பின்தங்கிய மாணவியரைத் தேர்ச்சி பெறச் செய்து நூற்றுக்கு நூறு விழுக்காடு வெற்றியடைய காலை 7.30 மணி முதல் இரவு 10.30 மணி வரை அயராது பாடுபடுவர். வறுமையில் வாடும் பலருக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம் நூல்கள் யாவும் தந்து தாயாகி நிற்பவர். பெற்றவர்களும் முடிவெடுக்கத் தயங்கிய காலகட்டத்தில் பல மாணவிகளுக்குக் கல்வியே சிறந்த செல்வம் என்று வலியுறுத்திப் படிக்க வைப்பவர்.

மாணவியரின் இளம் உள்ளங்களில் மறைந்து கிடக்கும் ஆற்றலை வெளிக் கொணருமாற்றால் பள்ளியளவில் தொடங்கி தேசிய அளவு வரை நடைபெறும் பல போட்டிகள், விளையாட்டுகள், சிறுசேமிப்பு, அறிவியல் கண்காட்சிகள், கலை நிகழ்ச்சிகள் அனைத்திலும் பங்கேற்க வைப்பவர். பெரும்பான்மை பரிசில்களையும் பாராட்டுக்களையும் பெற உழைப்பவர். தன் மாணவிகளில் பலர் இன்று தலைசிறந்த மருத்துவர்களாக - பொறியியல் வல்லுநர்களாக சட்டத்துறை ஆலோசகர்களாக மிளிர்வதில் பெரிதும் அகமகிழ்பவர். செல்வம் பெற்றவர் அதனைச்சேர்த்து வைக்குமிடம் தேவையுள்ள அறநிலையங்கள் என்பதனை அறிந்து முதியோர் இல்லம், விழியிழந்தோர் இல்லம்

தொழு நோயாளர் காப்பகம், மனநலம் குன்றிய குழந்தைகள் பள்ளி ஆகியவற்றிற்கு மாணவியரை வழங்கச் செய்து ஊக்குவிக்கும் இன்பம் பெறுபவர்.

பரம்பொருள் தன்னைப்படைத்த இடத்தில் தான் மலர்ந்து மணம் பரப்ப வேண்டும் என்ற திண்ணிய எண்ணம் மிக்க இவர் 'கலைமகளின்' மணம் பாரதமெங்கும் வீசச் செய்கிறார். உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளலும், செயற்கரியனவற்றைச் செம்மையுறச் செய்தலும் இவரது வெற்றியின் இரகசியங்களாகும். மனச்சாட்சியின் குரலுக்குச் செவிமடுப்பவர்; துறந்தாரின் தூய்மை உடையவர்; தொண்டரின் சேவை மனப்பாங்கினர். 'கலைமகளின்' வளர்ச்சியைத் தன் வாழ்வாகக்கொண்டவர். இதனால்தான் மாநில நல்லாசிரியர் விருதும், தேசிய நல்லாசிரியர் விருதும் இவரைத் தேடிச் சரணடைந்தன.

எந்தவொரு செயலையும் இடம், பொருள், ஏவல் காலங்கருதி முடிக்கவல்ல தலைமைப் பொறுப்பினர் பள்ளியை நோக்கிக் கருமேகங்கள் சூழும் காலங்களில் தருமத்தின் காவலராய் நின்று காத்தவர். பொதுப் பணத்தைக் கையாளுவதில் காந்தியடிகளின் தர்மகர்த்தாக் கொள்கையைக் கடைப்பிடிப்பவர்.

ஆசிரியைகள் அனைவரும் அமைதியான சூழலில் 'கலைமகள்' என்னும் நல்லதொரு குடும்பத்தினராய் இனிதே பணிபுரியப் பாடுபடுவர். தன்னை இகழ்வாரையும் பொறுத்தருளும் மாண்பினர். எண்ணற்ற அரிய சாதனைகள் பல படைத்தாலும் தன்னை வெளிக்காட்டிக் கொள்ள விரும்பாத பண்பினர். என் மனம் சோர்வின் பாற்படும் சமயங்களில் எப்பொழுதும் புத்துணர்வோடு உழைக்கும் இவர்தம் மனவுறுதியை எண்ணி எண்ணி நான் பலமுறை வியந்திருக்கின்றேன்.



வாடிய மக்களைக் கண்ணுறும்போதும், அவர்தம் இன்னல்களைக் கேள்விப்படும் போதும், தன் உள்ளம் மிகவும் வாடி அற்றார் அழிபசி தீர்க்கப் பொருளுதவி செய்பவர். உலகில் அமைதி, அன்பு, பண்பு தழைத்தோங்கப் பரமனிடம் பலகாலும் வேண்டி நிற்பவர். போற்றுதலுக்குரிய செம்மையான பண்புகள் அனைத்தின் உறைவிடமாய் மனிதருள் பலரும் பின்பற்றத்தக்க சிறந்த மனிதராய் விளங்குவதால் சிந்தைக்கினியவர். அந்தரங்கமாய் இவர் ஆற்றிய சேவைகளுக்கு ஆண்டவர் இவருக்கு வெளியரங்கமாய்ப் பரிசளித்துள்ளார். பணத்தையும் பதவியையும் துச்சமெனக் கருதும் ஆன்றோர் பலரை ஈன்ற பாரதத்தாய் அச்சான்றோர்களின் வழித்தோன்றலாக இவரை எங்களுக்கு அளித்தனளோ! நான் எண்ணுவதை எழுத்தில் வடிக்க என்னால் இயலவில்லை. ஆனால் நான் எழுதியுள்ள ஒவ்வொரு வரிக்கும் என் அன்னைபால் சான்றுகள் பல உள்ளன. கடவுளின் கையில் சிறு கருவியெனத் தன்னைக்கருதும் இவர்தம் எடுத்த காரியங்கள் யாவிலும் வெற்றி பெற அப்பரம் பொருளின் கடைக்கண்பார்வை இவர் மீது அருள்மழை பொழியட்டும்.

## எனக்கோர் நெல்லிக்கனி கிடைத்தால்...

S. தமிழரசி M.Com., M.Ed.,
வணிகவியல் ஆசிரியை, கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு - 1.

*மண்ணை ஆண்ட அதியமானுக்கு*
*மாணுயர்ந்த தமிழ்மொழி மீது பற்று!*
*மாசில்லாக் கல்விப் பணியாற்றும்*
*எனக்கோ கலைமகளில் பற்று!*

தமிழ் சிறக்க ஔவை மூதாட்டிக்குத்
தந்தான் நெல்லிக்கனி அதியன்
கலைமகள் சிறக்க எம் அன்னைக்குத்
தருவதற்கோ நெல்லிக்கனி இல்லை!
கனி இல்லை என்றாலும், கனிந்த
இறையருள் இதயத்தில் என்றுமுண்டு
கலைமகள் சிறக்க
இன்னும் ஆயிரம் பிறைகண்டு அன்னைவாழ
அருள்வாய் குகனே!
பொன்விழா காணும் கலைமகள்
வைரவிழா காண வாழ்த்துகிறேன்
வாழ்க கலைமகள்!
வாழிய பல்லாண்டு!

---

**From Our Visitors' Book....**

இந்துக்கள் ஒரு முறையேனும் பார்க்க விரும்புகிற
காசி போல -
கிறிஸ்தவர்கள் ஒரு முறையேனும் காண விரும்புகிற
ஜெருசலேம் போல -
இஸ்லாமியர்கள் ஒரு நாளேனும் தங்க வேண்டுமென்று எண்ணுகிற
மெக்கா போல -

இந்த நாட்டின் முன்னேற்றத்தில் அயராத ஆசை உள்ளவர்கள் கண்டே தீர வேண்டிய கலைப் பேழை.

"கலைமகள் கல்வி நிலையம்"

தன் கண்ணீராலும், செந்நீராலும் செல்வி. முத்தையா அவர்கள் வளர்த்துள்ள இந்த கலைக் கோயில் என்னை
பிரமிப்பில் ஆழ்த்துகிறது.

இந்த தாயின் காலடி மலர்களுக்கு எனது கண்ணீர் அஞ்சலி.

என்றென்றும் அன்புடன்,
வலம்புரிஜான், எம்.பி.
18.9.84

# LIST OF STAFF MEMBERS - 1995

## KALAIMAGAL KALVI NILAYAM GIRLS' HR. SEC. SCHOOL, ERODE.

| No. | Name | Designation |
|---|---|---|
| | Mrs. S. Lily Pushpam Mary, M.A., M.Ed., | Headmistress |
| 1. | Miss. S. Meerabai, M.A., M.Ed., | P.G. Asst. Headmistress |
| 2. | Mrs. E. P. Meenakshi, M.A., M.Ed., | P.G. Asst. |
| 3. | Mrs. Premavathy, M.A., M.Ed., | " |
| 4. | Mrs. P. Karpagam, M.A., M.Ed. | " |
| 5. | Mrs. V. Radha, M.Sc., M.Ed., | " |
| 6. | Mrs. S. Tamilarasi, M.Com., M.Ed., | " |
| 7. | Mrs. S. K. Kala, M.Com., M.Ed., | " |
| 8. | Mrs. S. Indirani, M.Sc., M.Ed., | " |
| 9. | Mrs. G. Shantha, M.Sc., B.Ed., | " |
| 10. | Mrs. V. Girija, M.Sc., B.Ed., | " |
| 11. | Mrs. S. Parvathi, M.Sc., B.Ed., | " |
| 12. | Mrs. E. Hannah Sasikala Manonmani, M.Sc., M.Ed., | " |
| 13. | Mrs. P. Revathi, M.Sc., B.Ed. | " |
| 14. | Mrs. J. Elizabeth Shanthi, M.A., B.Ed., | P.G. Asst. |
| 15. | Mrs. R. Harini | Computer |
| 16. | Mrs. A. Mumtaz, M.A., M.Ed., | B.T. Asst. Headmistress |
| 17. | Mrs. M. Jagadambal, M.A., M.Ed., | B.T. Asst. |
| 18. | Mrs. V. Padmini, M.A., M.Phil., M.Ed., | " |
| 19. | Mrs. Jebaseeli Rachel, B.Sc., B.T., | " |
| 20. | Mrs. A. Rachel Florence, B.Sc., B.T., | " |
| 21. | Mrs. C. J. Elizabeth Shanthini, B.Sc., B.T., | " |
| 22. | Mrs. S. Vasumathi, B.Sc., B.T., | " |
| 23. | Mrs. P. Mythili, B.Sc., B.T., | " |
| 24. | Miss. P. V. Mythili, M.Sc., M.Ed., | " |
| 25. | Miss. K. K. Porchelvi, B.Sc., B.Ed., | " |
| 26. | Miss. A. Aheeshabegam, B.A., B.Ed., | " |
| 27. | Mrs. P. Vasanthamalliga, B.A., B.Ed., | " |
| 28. | Mrs. V. Mangayarkarasi | Tamil Pandit |
| 29. | Mrs. P. Y. Banumathi M.A., B.Ed., | " |
| 30. | Miss. N. Balasaraswathi B.Lit., | " |
| 31. | Mrs. R. Lakshmi B.A., B.T., | " |
| 32. | Mrs. C. Sakkubai M.A., B.Ed., | " |
| 33. | Mrs. S. Meera | " |
| 34. | Miss. Bagyarani | " |
| 35. | Mrs. D. Sugirthakalyani | Sec. Gr. Asst. Headmistress |
| 36. | Mrs. R. Ruckmani | Sec. Gr. Asst. |
| 37. | Mrs. E. Kanthimathi, | " |
| 38. | Mrs. K. Subbulakshmi | " |
| 39. | Mrs. P. Sivabagiyam | " |
| 40. | Miss. I. Thulasimani B.Sc., B.Ed., | " |
| 41. | Mrs. C. Susila | " |
| 42. | Mrs. M. Regina Mary | " |
| 43. | Miss. K. G. Sumathi | " |
| 44. | Mrs. M. Vasantha B.Sc., B.Ed., | " |
| 45. | Mrs. S. R. Lakshmi | " |
| 46. | Mrs. D. Premaramani | " |
| 47. | Miss. G. Ramalakshmi | " |
| 48. | Mrs. B. Muthulakshmi | |

| | | |
|---|---|---|
| 49. | Miss. V. Manjubharathi | " |
| 50. | Mrs. M. Girija | " |
| 51. | Mrs. M. Lucasmary | Drawing mistress |
| 52. | Mrs. P. Saroja | Sewing mistress |
| 53. | Mrs. V. Radhamani B.A. | Music mistress |
| 54. | Mrs. C. Muthulakshmi, B.A., M.P.Ed., | Physical Director |
| 55. | Mrs. A. Palaniammal, B.A., B.Ed., | P.E.T. |
| 56. | Mrs. J. Flora | " |
| 57. | Mrs. G. Rajamani | " |
| 58. | Miss. G. Shanthi | Management |
| 59. | Miss. Kaleeswari, B.A., B.Ed., | " |
| 60. | Miss. C. Chitra, M.Sc., B.Ed., | " |

## KALAIMAGAL KALVI NILAYAM PRIMARY SCHOOL, ERODE - 1995.

| | | |
|---|---|---|
| 1. | Mrs. Lizzie Marjorie Pamela Pandian | Headmistress |
| 2. | Mrs. S. Esther Salome | Sec. Gr. Asst. |
| 3. | Mrs. J. Lilygrace | " |
| 4. | Mrs. S. Sakunthala | " |
| 5. | Mrs. B. Saraswathi | " |
| 6. | Mrs. S. Vedavalli | " |
| 7. | Mrs. G. Savithiri | " |
| 8. | Mrs. S. G. Krishnaveni | " |
| 9. | Mrs. R. M. Rajeswari | " |
| 10. | Mrs. S. Alamelu | " |
| 11. | Mrs. M. Kamalam | " |
| 12. | Mrs. J. Baby | " |
| 13. | Mrs. A. Indra Ramalakshmi | " |
| 14. | Mrs. T. N. Meenakshi | " |
| 15. | Mrs. R. Grace Janaki | " |
| 16. | Mrs. P. Lalithambal | " |
| 17. | Mrs. C. Papathi | " |
| 18. | Mrs. R. Chandraleela | " |
| 19. | Mrs. P. Angammal | " |
| 20. | Mrs. K. Vimala Chandrabai | " |
| 21. | Mrs. M. Pushpam | " |
| 22. | Mrs. M. Bagiyam | " |
| 23. | Mrs. C. Mangalambigai | " |
| 24. | Mrs. J. Arokiamary | Hr. Gr. Asst. |
| 25. | Mrs. K. Perambayee | Sec. Gr. Asst. |
| 26. | Mrs. G. Anandhi | " |
| 27. | Mrs. K. Dhanalakshmi | " |
| 28. | Mrs. M. Kalavathi | " |
| 29. | Mrs. R. Baby | " |
| 30. | Mrs. S. R. Tamilselvi | Hr. Gr. Asst. |
| 31. | Mrs. N. Immaculate | Sec. Gr. Asst. |
| 32. | Miss. V. Kavithabharathi | " |
| 33. | Mrs. S. Babykamala | " |
| 34. | Mrs. S. Ruby | " |
| 35. | Mrs. N. Amudha | " |
| 36. | Mrs. P. Tamilselvi | " |

## KALAIMAGAL KALVI NILAYAM GIRLS' MATRICULATION SCHOOL, ERODE.

Mrs. Prema Sara Jacob, M.A., B.Ed., Principal

1. Mrs. V. Vasanthi, M.Sc., B.Ed.
2. Mrs. Maruthambal, B.Sc., B.Ed.
3. Mrs. Saroja, B.A., B.T.
4. Mrs. Velammal, B.Sc., B.Ed.
5. Mrs. Mukthikanni, B.Sc., B.Ed.
6. Mrs. Freeda Sorna Pankajam Monoselvi, M.Sc., B.Ed.
7. Mrs. Kamalam, M.A., B.Ed.
8. Mrs. Anitha Egburk, B.Lit.
9. Miss. P. V. Rama, B.Sc., B.Ed.
10. Miss. Kamaleswari, M.SC., B.Ed.
11. Mrs. Manjula Devi, M.Com., B.Ed.
12. Miss. Betty Solomons, M.Sc.
13. Miss. V. Lennina, M.A.
14. Mrs. Shyamala, M.A.
15. Mrs. R. Kalpana, B.Sc., M.P.Ed., (Games)
16. Mrs. M. Shanthi, M.A., B.Ed., (Librarian)
17. Miss. K. Thangamani, (Craft)
18. Miss. K. Geetha, B.A., (Music)

## KALAIMAGAL KALVI NILAYAM PREPARATORY SCHOOL, ERODE.

Mrs. Shanthakumari Kanagaraj, M.A., B.T., Headmistress

1. Mrs. B. Premakumari, B.Sc., B.Ed.
2. Mrs. Janet Pushparani, B.Sc., B.Ed.
3. Mrs. Vanaja Kumari, M.A., B.Ed.
4. Mrs. Sundaram, M.A., B.Ed.
5. Mrs. Meenakshi, B.A., B.Ed.
6. Mrs. Gomathi, B.Sc., B.Ed.
7. Mrs. Selvi, B.Sc., B.Ed.
8. Mrs. Sivagama Sundari, B.Sc., B.Ed.
9. Mrs. Beaulah Shanthini, B.Sc., B.Ed
10. Miss. B. Shanthi, B.Com.
11. Mrs. Santhalakshmi, B.A.
12. Mrs. Sadhanandhi, M.A.

13. Mrs. Gunasundari,
14. Mrs. White Rose, B.Litt.,
15. Miss. D. Jasmine Kirubhavathiy, D.T.E.
16. Mrs. Chithrakala
17. Mrs. Vimaladevi, M.Sc., B.Ed.,
18. Mrs. Malathi, B.Sc., B.Ed.,
19. Miss. Sree Vidhya, B.Sc., B.Ed.,
20. Mrs. Vijaya, B.Sc., B.Ed.,
21. Miss. J. S. Augusta Emerald Gracy, B.Sc., B.Ed.,
22. Miss. Saraswathi, B.Com.,
23. Mrs. Manorama, B.Sc.,
24. Mrs. M.C. Lyla
25. Miss. G. Joseline Sheela, D.T.E.
26. Miss. Rani Ambika, B.A., B.P.Ed., (Games)
27. Mrs. Rita Roberts
28. Mrs. C. J. Johnson
29. Mrs. C. Desmier
30. Mrs. C. Meyers
31. Mrs. A. D'silva
32. Mrs. Joan D'silva
33. Mrs. Jackie
34. Mrs. T. D. Rozario
35. Mrs. Elutharasi
36. Miss. Kavitha
37. Mrs. N. Poongodi
38. Mrs. Anbu Selvi
39. Miss. Beula Jayanthi

## OFFICE STAFF

1. Mrs. D. Radhabai
2. Mrs. M. Kokila
3. Mrs. S. Muthulakshmi
4. Mr. A. Thulasimani
5. Mrs. R. Santhanalakshmi
6. Mrs. Soroja Samuel Raj
7. Mrs. R. Swarnalatha
8. Mr . R. Subbaraman
9. Miss. A. Jeyanthi
10. Miss. A. Usharani
11. Miss. P. Meena
12. Miss. S. Malathi
13. Mr . G. Kandasamy
14. Mr . R. Kanagaraj
15. Mr. S. Anandkumar
16. Mrs. Yogambal
17. Miss. K. Parameswari

## HOSTEL STAFF

1. Mrs. Vijaya
2. Mrs. Pankajam
3. Mrs. Saraswathi
4. Mrs. Kamalam
5. Miss. Latha
6. Miss. Vimala
7. Mrs. Velammal
8. Mrs. Ruckmani
9. Mrs. Palaniammal
10. Mrs. Krishnaveni
11. Mrs. Seethalakshmi
12. Mrs. Santhadevi
13. Mrs. Ramayee
14. Miss. Jothi
15. Miss. Parimala
16. Miss. Punitha
17. Miss. Sankari
18. Miss. Madeswari
19. Mr. Ayyakannu
20. Mr. Rajendran
21. Mr. Alagappan
22. Mr. Subramani
23. Mr. Karthick



திருமதி. பெலிசியா ஜோசப் M.A., M.Ed., அவர்கள்
ஒருங்கிணைப்பாளர்



மேனிலைப்பள்ளி தலைமை ஆசிரியை
உதவித் தலைமை ஆசிரியைகள்



ஒருங்கிணைப்பாளருடன் மெட்ரிகுலேஷன் பள்ளி, துவக்கப்பள்ளி, குழந்தைகள் ஆங்கிலப் பள்ளி தலைமை ஆசிரியைகள்



மேல்நிலைப்பள்ளி ஆசிரியைகள் - 1995



உயர்நிலைப்பள்ளி ஆசிரியைகள் - 1995



துவக்கப்பள்ளி ஆசிரியைகள் - 1995



மெட்ரிகுலேசன்பள்ளி ஆசிரியைகள் - 1995



ஆங்கிலத் துவக்கப்பள்ளி ஆசிரியைகள் - 1995



அலுவலகப் பணியாளர்கள் - 1995



விடுதிப் பணியாளர்கள் - 1995

# பொன்விழா காணும் கலைமகள்

திருமதி. மங்களவதி M.A., M.Ed.,
நிர்வாகி & மானேஜிங் டிரஸ்டி

*எண்ணிமுடியாத அதிசயங்கள் பல செய்த இறைவனுக்கு எண்ணிலடங்கா நன்றிதனைக் காணிக்கையாக்குகிறேன்.*

## நிறுவனர் 'ஐயா' :

1945 இல் வித்திடப்பட்டு நிறுவனர் அமரர் 'ஐயா' மீனாட்சி சுந்தரனார் அவர்களால் திருமதி பாலாம்பாள் தலைமையில் சீராட்டி, பாராட்டி போற்றி வளர்க்கப்பட்ட கலைமகள் கல்வி நிலையம் - 1955 முதல் எமது அன்பிற்கும் மரியாதைக்குமுரிய மறைந்த தாளாளர், செல்வி. முத்தையா அவர்களின், கண்டிப்பும் அன்பும் கலந்த அரவணைப்பில் பேணி வளர்க்கப்பட்டு நறுமணம் வீசும் மலர்ச்சோலையாக உருவாகியது. வயற்காடாய், கட்டாந்தரையாக இருந்த பூமி, பார்ப்போர் வியக்கும் வண்ணம் பசுஞ்சோலையாய் மாறியது. கல்வி நிலையத்தில் பயிலும் சிறுவர் உடல் வளர்ச்சியுடன், அறிவு வளர்ச்சியும் ஆன்ம வளர்ச்சியும் பெற்று முழுமையான வளர்ச்சி பெற்ற நாட்டின் பிரஜைகளாக உருவாகும் வண்ணம் காந்தீயப் பாதையில் அழைத்துச் சென்றவர் எம் ஐயா. வளர்ந்து வரும் அதன் நலன் கருதி 1970ம் வருடம், வெள்ளி விழாவன்று, தாம் கண்ணெனப் பாதுகாத்த கல்வி நிலையத்தை, கல்வி மேதையான அவர் ஒரு பரந்த தொலைநோக்குடன், ஈரோட்டின் பொதுச் சொத்தாக அர்ப்பணித்தார்.

## கலைமகள் அன்னை :

1973 இல் கலைமகள் காவலர் ஐயா அவர்களின் மறைவு, கல்வி நிலையத்திற்கும் அதன் நிர்வாகியும் மானேஜிங் டிரஸ்டியுமான அன்னை செல்வி M. முத்தையா அவர்களுக்கும் ஒரு சவாலாக அமைந்தது. எதிர்ப்பட்ட இடையூறுகளை இறைவனின் உறுதுணையோடு மேற்கொண்டு, புதியதொரு பாதையில் நிலையத்தை அழைத்துச் சென்றார் எம் அன்னை. மூன்று மாடி வகுப்பறைகளும், அறிவியல் ஆய்வுக் கூடங்களும், அயல்நாட்டினரும் வருகை தரும் தொல்பொருள் ஆய்வுக் கூடமும் பள்ளியை அலங்கரித்தன. உயர்நிலைப் பள்ளி மேனிலைப்பள்ளியாக உயர்த்தப்பட்டதுடன், சிறுவர் ஆங்கிலப் பள்ளி, மெட்ரிக்குலேஷன் பள்ளியாக உயர்ந்தது. தமிழகம் மட்டுமின்றி நாடு முழுவதும் போற்றும் வண்ணம், மாநில, தேசிய நல்லாசிரியர் விருதுகள் பெற்று நிலையத்தை முன்னணியில் நிறுத்திய பெருமை அன்னையைச் சாரும்.

## நீங்காத் துயரம் :

1995ஆம் வருடம் கொண்டாடவிருக்கும் பள்ளியின் பொன் விழா குறித்துப் பெருமையுடனும் பூரிப்புடனும் திட்டமிட்டுக் கொண்டிருந்த அன்னைக்குச் சற்றும் எதிர்பாராத சமயத்தில் இறைவனின் அழைப்பு வந்தது. பள்ளி நிறுவனர் ஐயா, நிர்வாகியும், சிற்பியுமான செல்வி முத்தையா இருவரும் இறைவனடி சேர்ந்த 1973ஆம் ஆண்டு மே 14ம் நாளும், 1994ஆம் ஆண்டு ஆகஸ்டு 30ஆம் நாளும் 'கலைமகள்' சரித்திர ஏட்டில் துயர நாட்களாக என்றும் நீங்கா இடம் பெற்று விட்டன.

## பொறுப்பு மாற்றம் :

பொன்விழா காணும் ஆண்டிற்குள் 'கலைமகள்' காலடி வைக்கும் தருணத்தில் நிர்வாகப் பொறுப்பு என் மீது சுமத்தப்பட்டது. அன்னையின் அன்புக் கட்டளையை மீற முடியாமல் அவர்தம் ஆணையைச் சிரமேற் கொண்டு, கடந்த 30 ஆண்டுகளாக அன்னையுடனும், ஆசிரியச் சோதரியருடனும், பள்ளி அலுவலருடனும் இணைந்து பணியாற்றிய அனுபவத்தைத் துணையாகக் கொண்டு பொறுப்பில் அமர என்னை முன் குறித்து விட்ட இறைவனையே நிர்வாகப் பொறுப்பில் அமர்த்தி, அவருக்காகச் செயல்படும் கருவியாக மட்டும் என்னை அர்ப்பணித்துக் கொண்டேன். 'என் கிருபை உனக்குப் போதும்' 'என் பெலத்தினால் உன்னை இடைக்கட்டுவேன்' எனும் வாக்குமாறா இறைவனின் வாக்குறுதிகள் மீது முற்றிலும் சார்ந்தவளாகப் பொறுப்பை நிறைவேற்றும் பணியில் ஈடுபட்டுள்ளேன். பள்ளியில்

மனதை நெகிழ வைத்தது. பள்ளியின் பல்வேறு திட்டங்களுக்குப் பெற்றோர் நல்கி வரும் ஒத்துழைப்புக்கு எமது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கடந்த நாட்களில் கண்மணிபோல் கருத்துடன் எமைக்காத்த இறைவனுக்கு நன்றி கூறுகிறேன். இனி வரும் காலங்களிலும், ஈரோட்டின் பொதுச் சொத்தாக அர்ப்பணிக்கப்பட்ட இக்கல்வி நிலையம் எல்லா வகையிலும் உயர்ந்தோங்கி, ஈரோடு நகருக்கும், தமிழகத்திற்கும், பாரதத் திருநாட்டிற்கும் சிறந்த தொண்டாற்றும் சேவா நிலையமாகச் செயல்பட எல்லாம் வல்ல இறைவன் திருவருளை வேண்டுகிறேன்.



டாக்டர். கே. எம். நல்லசாமி, எம்.பி.பி.எஸ்., எப்.ஐ.சி.எஸ்., அவர்கள்

1972ம் ஆண்டு முதல் கலைமகள் நிர்வாகக்குழு அங்கத்தினராய், பயன் கருதாது பணியாற்றி, பள்ளி நிர்வாகத்திற்கு உறுதுணையாயிருந்து தமது நல்லாலோசனைகளை வழங்கி வரும் டாக்டர். கே. எம். நல்லசாமி அவர்கட்கு எமது உளமார்ந்த நன்றி.



டாக்டர். கே. துரைசாமி, எம்.எஸ்., அவர்கள்

1994-95 வரை கலைமகள் மேனிலைப்பள்ளி பெற்றோர் - ஆசிரியர் சங்கத் தலைவராகப் பணியாற்றி 'கலைமகள்' விடுதி வளாகத்திலும், துவக்கப்பள்ளி வளாகத்திலும் குழாய் கிணறுகள் (போர்வெல்) அமைத்துக் குழந்தைகள் தண்ணீர் தட்டுப்பாடின்றி இருக்க உதவிய முன்னாள் மேனிலைப்பள்ளி பெற்றோர் ஆசிரியர் சங்கத்தலைவர் டாக்டர் கே. துரைசாமி அவர்கட்கு எமது இதயங்கனிந்த நன்றி.

**From Our Visitors' Book....**

*கட்டுப்பாடும், இனிமையும், ஆர்வமும் நிறைந்த மாணவிகள் மத்தியில் உரையாற்றியது நிறைவைத் தந்தது. இள உள்ளங்களை எதிர்கால குடிமக்களை உருவாக்கும் பணியில் ஈடுபடப் போகும் ஒரு இனத்தை உருவாக்குவது இலேசான காரியமல்ல.*

*இலட்சிய நோக்கும், துணிவும், கட்டுப்பாடும், நல்லெண்ணமும் நிறைந்த செல்வி. முத்தையாவின் தலைமையின் கீழ் அத்தகைய குணங்கள் அடிவரை பரவும் வழிவகைகளை ஈரோட்டு கலைமகள் கல்வி நிலையம் செய்து வருவதைப் பாராட்டுகிறேன்.*

எம். எஸ். உதயமூர்த்தி
21.7.88




ஆங்கிலத் துவக்கப்பள்ளி



ஆடி மகிழும் மழலையர்



லை நிகழ்ச்சியில் பங்குபெற்ற எம் மழலையர்



அமரர். உயர்திரு. சிவபாத இருதயப்பிள்ளை அவர்கள்
*ஐயாவின் தமிழாசிரியர்*



அமரர். திருமதி. பார்வதம் அம்மையார்
*திரு. சிவபாத இருதயப்பிள்ளையின் துணைவியார்*




ஐயாவின் நினைவு இல்லம்



கலைமகளின் நந்தா விளக்கு ஐயா



சாந்தி இல்லத்தின் உள்ளே

# கலைமகள் கல்வி நிலைய ஆங்கிலத் துவக்கப் பள்ளி

## (Preparatory School)

**Mrs. Santhakumari Kanagaraj, M.A., B.Ed.,**
Head Mistress.

கலைமகள் கல்வி நிலையம் ஆறாயிரத்திற்கும் மேற்பட்ட மாணவச் செல்வங்களையும் இருநூறுக்கும் மேற்பட்ட ஆசிரியைகளையும் தன்னுள் அடக்கிய நிலையம். நர்சரி, பிரிப்பரேட்டரி, ஆதாரப் பள்ளி, மெட்ரிகுலேஷன், உயர்நிலை, மேல்நிலை என ஆறு பிரிவுகளாய்ச் செயல்பட்டு வரும் நிலையத்தில் பிரிப்பரேட்டரி பிரிவில் L.K.G., முதல் V Standard வரை சுமார் ஆயிரத்து நூறு மாணவ மாணவியர் பயின்று வருகின்றனர். ஆங்கிலோ - இந்திய ஆசிரியைகளும் மற்றும் பட்டதாரி ஆசிரியைகளும் சிறந்த முறையில் பயிற்றுவிக்க நியமிக்கப்பட்டுள்ளனர்.

### பிரார்த்தனை :

பள்ளியினுள் காலையில் நுழையும்போதே அவர்களுக்கு உற்சாகம் ஊட்டும் வகையில் மழலையர் பாடல்களை ஒலிநாடா மூலம் தினமும் ஒலிபரப்புகின்றோம். காலை 9.10 மணிக்கு பிரார்த்தனைக் கூட்டம் ஆரம்பமாகின்றது. இதில் எல்லா வகுப்புக் குழந்தைகளும் கலந்து கொள்கிறார்கள். அப்பொழுது பிறந்தநாள் கொண்டாடும் குழந்தைகளை வாழ்த்தி பிறந்தநாள் வாழ்த்துப் பாடல் பாடப்படுகிறது.

### கல்வி :

''ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?'' ''விளையும் பயிர் முளையிலே தெரியும்'' என்னும் பழமொழிகளைக் கேட்டிருக்கிறோம். இளவயதிலேயே கட்டுப்பாடு, ஒழுக்கம், சிறந்த பழக்க வழக்கம் முதலியன வலியுறுத்தப்பட்டால்தான் எதிர்காலம் ஒவ்வொரு வருக்கும் பிரகாசமாய் அமையும். அதிலும் இளம் குழந்தைகளின் ஆசிரியைகள் ஒரு குழந்தையின் வாழ்வில் முக்கிய அங்கம் வகித்து வருகின்றனர். எனவே இந்தஇளம் சிறார்களின் முன்னேற்றம் கருதியும், முக்கியத்துவம் கருதியும், பயிற்சி பெற்ற ஆசிரியர்களென்றாலும் கல்வியினைப் போதிப்பது பற்றி ஆசிரியர்களை சந்தித்து அவ்வப்போது நிர்வாகி அவர்களும் விளக்கிக் கூறுகின்றனர். பாடத் திட்டத்தின்படி பாடங்கள் நடத்தப்பட்டு மாதத் தேர்வுகள் நடத்தப்படுகின்றன. கல்வியில் அல்லது குழந்தை பற்றிய தகவல் ஏதேனும் தெரிவிக்கப்பட வேண்டுமென்றால் நாள் குறிப்பு ஏடு (Diary) உபயோகிக்கப் படுகிறது.

### கலை நிகழ்ச்சிகள் :

குழந்தைகளின் தனித்திறமைகளை வெளிப்படுத்த ஒவ்வொரு பருவத்திலும் தமிழ் இலக்கிய மன்றம், ஆங்கில இலக்கிய மன்றம் ஆகியன நடத்தப்படுகின்றன. இதில் தனிப்பாடல், குழுப்பாடல், நடனம், குழு நடனம், உரையாடல், சொற்பொழிவு, நாடகம், தனிநடிப்பு ஆகியன இடம் பெறும். அவரவர் திறமைக்கேற்ப பாடலிலும் ஆடலிலும் நாடகத்திலும் குழந்தைகளைத் தேர்வு செய்து ஆசிரியர்களும் பெற்றோர்களும் பயிற்சி கொடுத்து கலை நிகழ்ச்சிகளைச் சிறப்புடன் செய்து வருகின்றனர். இதற்கு பெற்றோர்களின் பூரண ஒத்துழைப்பும் ஆசிரியர்களுக்குக் கிடைக்கின்றது.

### போட்டிகள் :

பள்ளியில் நடத்தப்படும் போட்டியான 'ஐயா' நினைவுப் போட்டி மட்டுமல்ல, வெளியிடங்களில் நடைபெறும் போட்டிகளிலும் மாணவர்கள் பங்கு கொள்வதுண்டு. இவற்றில் 'அவ்வை நிலையம்' திருக்குறள் மன்றத்தாரால் நடத்தப்பெறும் போட்டி, கார்மல் பள்ளியில் ஒவ்வொரு வருடமும் நடத்தப்படும் போட்டி, ஓவியப் போட்டி, கலைமகள் சபாவினரால் நடத்தப்பெறும் போட்டிகள் குறிப்பிடத் தக்கவை. இவ்வாறு போட்டிகளில் பங்கு பெறும் போது மாணவர்களுக்குச் சிறு வயது முதல் விடாமுயற்சியும் தன்னம்பிக்கையும் வளர வாய்ப்புக் கிடைக்கின்றது. போட்டிகளில் வெற்றி பெற வேண்டும் என்ற ஓர் ஆர்வம் வளர்கின்றது. வெற்றி பெற்றவர்கள் மனதில் தாம் இவ்வாறு ஒவ்வொரு வருடமும் வெற்றி பெற வேண்டும் என்ற எண்ணமும் உறுதியும் தோன்றுகின்றது. வெற்றி பெறாதவர்கள் அடுத்த வருடம் வெற்றி பெற்றிட வேண்டும் என்ற ஓர் உறுதியுடன் இருக்கின்றனர்.

# கலைமகள் கல்வி நிலைய மெட்ரிகுலேஷன் பள்ளி

**Mrs. Felicia Joseph, M.A., M.Ed.**
Former Principal

கலைமகள் கல்வி நிலையத்தின் ஒரு பகுதியாக இயங்கும் மெட்ரிகுலேஷன் பள்ளி 1985ஆம் ஆண்டு ஜூன் மாதம் துவக்கப்பட்டது. இப்பள்ளியின் துவக்கத்திற்கு மூலகாரணமாய் விளங்கியது ஈரோடு மாநகரின் பெற்றோரே யாவர். ஆங்கில வழிக் கல்விக்கு உயர்நிலைப் பள்ளியில் ஒரு பிரிவு மட்டுமே ஒதுக்கப்பட்டிருந்தமையாலும், ஆங்கிலத் துவக்கப் பள்ளியிலிருந்து வரும் மாணவியர் அனைவருக்கும் போதிய இடமில்லாதிருந்த காரணத்தாலும், பெரும்பாலோர் வேறு பள்ளிகளை நாட வேண்டிய நிலை இருந்தது. எனவே பெற்றோர் வேண்டுகோளுக்கிணங்க மெட்ரிகுலேஷன் பள்ளி உருவாயிற்று.

80 மாணவியருடன் துவக்கப்பட்ட மெட்ரிகுலேஷன் பள்ளி இன்று 535 மாணவியருடன் 17 ஆசிரியைகளுடனும் செயல்பட்டு வருகிறது. கடந்த 6 ஆண்டுகளாக மாணவியர் மெட்ரிக் பொதுத் தேர்வுக்கு அனுப்பப் படுகின்றனர். முதலாண்டில் 99% மாணவியர் தேர்ச்சி பெற்றனர். அதன் பின் ஒவ்வொரு ஆண்டிலும் 100% தேர்ச்சி பெறுவதோடு கூட அனைவரும் முதல் வகுப்பில் தேறி பள்ளிக்குப் பெருமை சேர்க்கின்றனர். மேலும் 1994ஆம் ஆண்டு மெட்ரிக் பொதுத் தேர்வில் ரம்யா ராம்ராஜ் என்ற மாணவி 1040/1100 மதிப்பெண்கள் பெற்று மாநிலத்தில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்றது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

கல்வித்தரத்தில் மட்டுமின்றி பிற துறைகளிலும் மாநில அளவுப் போட்டிகளில் கலந்து கொண்டு வெற்றி பெற்று தேசிய அளவில் தலைநகர் சென்று போட்டிகளில் கலந்து கொண்ட மாணவியர் சிலர் உண்டு. அவர்களுள் சுசன்னா வீரா குறிப்பிடத்தக்கவர். மேலும் சாரணியம், இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம் ஆகிய பிரிவுகளும் திறமையுடன் செயல்படுகின்றன. விளையாட்டுத் துறையிலும் சாலச் சிறந்த பயிற்சி பெற்று எல்லாப் போட்டிகளிலும் கலந்து கொண்டு வெற்றி பெற வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன. இலக்கியம், கலை இவற்றை வளர்க்கும் வகையில் நடைபெறும் எல்லாப் போட்டிகளிலும் கலந்து கொண்டு தங்கள் திறமைகளை வளர்க்கின்றனர். கார்மல் மெட்ரிகுலேஷன் பள்ளி நடத்தும் பல்வகைப் போட்டிகளிலும் கலந்து கொண்டு முதற் பரிசைவென்று வெற்றி வாகை சூடினர்.

சுற்றுலாக்கள் இலக்கிய மன்றங்கள், குழுச் செயல்கள் ஆகியவை பள்ளி துவக்கம் முதல் நடைபெறும் சிறப்புச் செயல்களாகும். மேலும் ஒழுக்கத்தை வளர்க்கும் வகையில் காலை பிரார்த்தனையில் அறிவுரைகள் வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு புதன் கிழமையும் ஓர் ஆசிரியை மாணவியருக்கு நல்ல கருத்துக்களை எடுத்துக் கூறுகின்றனர். வெள்ளி தோறும் சர்வோதயப் பிரார்த்தனையில் மும்மதங்களின் பாடல்களும், போதனைகளும், பயன்படுத்தப் படுகின்றன. வாழ்க்கை நெறிகள் Value Education பாடத்திட்டத்தின் கீழ் போதிக்கப்படுகின்றன. மெட்ரிக் பள்ளிக்கென ஒரு நூலகமும் சிறப்பாக இயங்கி வருகின்றது.

மெட்ரிகுலேஷன் பள்ளிக்கு மற்றொரு அணிகலனாக விளங்குவது கணிப் பொறியியல் பகுதி (Computer Science) ஆறாம் வகுப்பு முதல் ஒன்பதாம் வகுப்பு வரை அனைத்து மாணவியரும் கட்டாயப்பாடமாக Computer Science படிக்கின்றனர். வாரம் ஒரு முறை பாட வகுப்பும், வாரம் மும்முறை செய்முறை வகுப்புகளும் நடைபெறுகின்றன. இவ்வகுப்புகள் N.I.I.T. நிறுவனத்தினரால் கடந்த 5 ஆண்டுகளாக நடத்தப்பட்டு வருகின்றன. இதற்கென 12 கணிப்பொறிகள் பள்ளிக்கு N.I.I.T. யினரால் அளிக்கப்பட்டுள்ளன. 2 ஆசிரியைகளும் நிரந்தரமாகப் பணி செய்து வருகின்றனர்.

இந்த Computer Section மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டு A.C. வசதியுடன் பராமரிக்கப்பட்டு வருகிறது.

மாணவியரின் ஆக்கப்பூர்வமான வளர்ச்சியை (Total Personality Development) நோக்கமாகக் கொண்டு எம் மெட்ரிகுலேஷன் பள்ளி செயல்பட்டு புகழோடு வளர்ந்து வருகிறது. சீரான பணி செய்து நூறாண்டுகள் வாழ வாழ்த்துகிறோம்.

நல்லாசிரியர் விருதுபெற்ற எமது ஆசிரியப் பெருமக்கள்



*மாநில நல்லாசிரியர் விருதுபெறும்*
*அன்னை செல்வி.* **M.** முத்தையா **B.A., B.T.,** அவர்கள் (1970)




*தேசிய நல்லாசிரியர் விருதுபெறும்* அன்னை (1983)

## நூல் நிலையம் :

தனிப்பட்ட முறையில் புத்தகங்கள் படிக்கும் பழக்கம் வரை மாணவர்கள் மாதமிருமுறை நூல்நிலையத்திற்கு அழைத்துச் செல்லப் படுகின்றனர். மேலும் இளம் குழந்தைகளுக்குப் பல வண்ண வண்ணப் படங்களுடன் கூடிய பல புத்தகங்கள் உள்ளன. தினமும் கதைகளும் கூறப்படுகின்றன. அவரவர் பிறந்த நாளன்று நூல் நிலையத்திற்குப் புத்தகம் ஒன்று நினைவுச் சின்னமாகக் கொடுப்பதன் வாயிலாக நூல்நிலையத்திற்குப் புத்தகங்கள் நிறைவது மட்டுமல்ல; 'என்' புத்தகமும் இந்நூல்நிலையத்தில் இருக்கின்றது என்ற மனநிறைவும் மாணவர்களிடையே ஏற்படுகின்றது.

## கராத்தே :

தற்காப்புத்திறன் வளர்ப்பதற்குத் தேவையான 'காராத்தே' வகுப்புகள் தகுந்த ஆசிரியர்களால் பள்ளியில் நடத்தப்பட்டு வருகின்றது. ஆர்வமுள்ள மாணவ மாணவிகள் இதில் பயின்று வருவதோடு, பரிசுகளும் சான்றிதழ்களும் பதக்கங்களும் அவரவர் திறமைக்கேற்ப பெற்று பெருமை சேர்த்து வருகின்றனர்.

## உல்லாசப் பயணங்கள் :

இளம் வயதிலேயே உல்லாசப் பயணங்கள் செல்வதன் மூலம் குழந்தைகளுக்குள் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை, தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ளுதல், எதனையும் அறிவுப் பூர்வமாக நோக்கும் திறன் போன்ற குணங்கள் வளர்வதோடு அவர்களுக்குள் ஏற்படும் சிறு சிறு பூசல்களும் மறைவதற்கு வழிவகுக்கவும், தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும் ஒரு வாய்ப்புக் கிடைக்கின்றது. பொறுப்புகள் ஆசிரியர்களால் கொடுக்கப்படும்போது பெருமையுடன் அவற்றை நிறைவேற்றுவதன் மூலம் அவர்களிடையே பொறுப்புணர்ச்சி வளர்கின்றது.

## பிரார்த்தனையுடன் பிரிவு :

மாணவிகளுடன் பிரப்பரேட்டரிப் பள்ளியில் மாணவர்களும் கல்வி பயன்று வருகின்றனர். ஐந்து வகுப்புக்கு மேல் தொடர முடியாத நிலையில் மாணவர்கள் வேறு பள்ளிகளுக்குச் சென்று தங்கள் கல்வியைத் தொடர வேண்டிய நிலையிலுள்ளனர். எனவே அவர்கள் அவ்வாறு இடம் மாறி பிரிந்து செல்லும் போது அதற்கு முக்கியத்துவம் கொடுத்து "நீங்களும் கலைமகள் கல்வி நிலையத்தின் மாணவர்கள் என்ற எண்ணத்துடனும் பெருமையுடனும் ஒழுக்கமாகக் கல்வி கற்று நீங்களும் பெருமை பெற்று பெற்றோர்களுக்கும் பெருமை சேர்க்க வேண்டும்" என்று சிறந்த அறிவுரை வழங்கப்பட்டு சர்வோதய பிரார்த்தனையுடன் வெளியே அனுப்பப் படுகின்றனர். மாணவிகளோ, தங்கள் தங்கள் திறமைகளுக்கேற்ப மெட்ரிக் பள்ளியில் அல்லது உயர்நிலைப் பள்ளியில் நிலையத்திலேயே தங்கள் கல்வியைத் தொடர்கின்றனர்.

---

**From Our Visitors' Book...**

*நாவோடை சூழ் தனிபேர் நிலப்பரப்பில்*
*ஈரோடை புகழ் நனிக்கல்வி பெருவெளியில்*
*சீரோடை திகழ் செழும் பேர் கலைமகளை*
*பாரோடை வியக்க நான் இன்று பார்த்தேன்*
*தென்பாண்டி முத்தெடுத்து செழுந்திறன் சேர்த்து வைத்து*
*செம்பொற் சுந்தரனார் பார்த்து வைத்தார்*
*'செல்வி முத்தை' கொங்குக் 'கலைமகளை' காத்திருந்து*
*செழுங்கலை 'அய்யா' இங்கு ஊட்டி வளர்த்தார்*
*கல்விக் கடலிலே கலைமகளை சிறுகரையாய்*
*தொல் பொருள் கதை கூறும் பெருங்கனவாய்*
*செல்வத் திரு இசைபாடும் உறுநிலவாய்*
*செய்த 'முத்தையா' வாழ்க பெருந்துணையாய்!*

*அன்பன்*

**(ஓ.ம்) அ.ந. தியானேஸ்வரன் இ.ஆ.ப.,**
மாவட்ட ஆட்சியர்,
பெரியார் மாவட்டம், ஈரோடு.
7.9.81

# நெஞ்சில் ஓர் ஆலயம்



**R.C. கந்தசாமி, B.Litt.,**
*தலைவர், பெற்றோர் ஆசிரியர் சங்கம்.*

''நெஞ்சில் ஓர் ஆலயம்'' ஆம்! எங்கள் உள்ளங்களில் எல்லாம் நெஞ்சில் ஓர் ஆலயமாக வீற்றிருப்பது இந்தக் கலைமகள் கல்வி நிலையம்தான் என்று சொன்னால் அது மிகையாகாது! நெஞ்சில் ஆர் ஆலயமாக இதனைப் போற்றுவதற்குக் காரணம், ஆலயத்தில்தான் அமைதி இருக்கும்; அன்பு இருக்கும்; அடக்கம் இருக்கும், பண்பு இருக்கும்; பழக்கவழக்கம் இருக்கும்; பயம் இருக்கும்; பக்தி இருக்கும்; அத்துடன் தூய்மையும் அங்கே துணை நிற்கும்; ஆக ஆலயத்திற்கே உரித்தான அத்துணை நற்பண்புகளையும் ஒருங்கே கொண்டதுதான் இந்த கலைமகள் கல்வி நிலையம்!

மேலும் இங்கில்லாத அருமை, பெருமைகளை வேறெங்கும் காண்பது அரிது. தமிழ்நாட்டுச் சாந்தி நிகேதன், கலைமகள் குடி கொண்டுள்ள கலைக் கோயில் கமலாலயம், இருள் நீக்கும் இளங்காலைப் பொழுது இவ்வாறெல்லாம் இதனை அறிந்தோர் பலர் புகழாரம் சூட்டியுள்ளனர்.

''ஒன்றே குலம், ஒருவனே தேவன்'' என்ற அருள்வாக்குப்படி இங்கு ஜாதி மத வேறுபாடின்றி அனைவரும் சமமாக மதிக்கப்படுகின்றனர். ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற கனியன் பூங்குன்றனாரின் புறநானூற்றுப் பாடல் இங்குதான் செயல்வடிவில் செயல்படுகிறது.

இந்த இமயத்துக்கு இதுசமயம் ''பொன் விழா'' ஆயிரமாயிரம் பேர் அணிவகுத்து மகுடம் சூட்டி மகிழும் மணி விழா! இமயம் என்ற பெயரிலேயே ஏகப்பட்ட பெருமைகள் இருக்கும் போது இதற்கு நாங்கள் மகுடம் சூட்டித்தான் பெருமை பெற வேண்டுமா? உங்கள் கேள்வியில் நியாயம் இருக்கிறது. ஆனால் இமயத்துக்கு நாங்கள் மகுடம் சூட்டித்தான் பெருமை அடைய வேண்டும் என்ற நிலையில்லாமல் இருக்கலாம். ஆனால் எங்களுக்கு இந்த இமயத்திற்கு மகுடம் சூட்டித்தான் பெருமை அடைய வேண்டும் என்ற நிலையிருக்கிறது. அதற்காகத்தான் இந்த மேரு மலைக்கு நாங்கள் தமிழை அழகு வரிசைப்படுத்தி அணியாக, மாணிக்க மகுடமாக அணிவித்து மகிழ்கின்றோம். இந்த ஆல விருட்சத்தின் அடியில் தங்கி எங்கள் பெண்கள் கல்வி இளைப்பாற செய்தமைக்கு நாங்கள் காட்டும் நன்றிக் கடன் இந்த ஒன்றுதான்.

''புன்முறுவலுடன் சேவை செய்'' (SMILE AND SERVE) என்பதை வேதவாக்காகக் கொண்டு சேவை செய்யும் மாண்புதான் இப்பள்ளியின் வெற்றிக்குக் காரணம். இத்துடன் கதை - கட்டுரை - இசை - நடிப்பு - சாரணீயம் - விளையாட்டு - ஓவியம் - பேச்சு என்று அனைத்துக் கல்வி பயிலும் மாணவ மாணவிகளுக்கு இங்கு கவனமாகப் பயிற்சியளிக்கப்பட்டு வருகிறது.

டெல்லியில் நடைபெறும் இளஞ் சாரணியர் விழாவில் எண்ணற்ற பரிசுகளை இப்பள்ளிக் குழந்தைகள் அள்ளி வந்திருக்கின்றனர்.

விளையாட்டுத்துறையிலும் விளையாட்டாக இல்லாமல் சிறந்த நிபுணர்களை அழைத்து தொடர் பயிற்சி கொடுத்து இப்பள்ளியின் மாணவியர் பல பரிசுகளையும், பதக்கங்களையும் வாங்கிக் குவிக்க வகை செய்துள்ளனர்.

இங்குள்ள கலையரங்கில் கவியரங்கம், பட்டி மண்டபம், விவாத அரங்குகள் உரைநடைகள், ஓவியப் பயிற்சி என பல பயிற்சிகள் கொடுத்து பலரையும் பரிசு பெறத் தகுதியுடையோராக்குகின்றனர்.

இசையும், நாட்டியமும், நாடகமும், இங்கே பயிற்சிப் பட்டறையில் பல நாள் செப்பனிடப்பட்டு, பட்டை தீட்டிய

# நாட்டு நலப் பணித்திட்டத்தில்
# எம் பள்ளி மாணவியர் பங்கு

திருமதி. முத்துலட்சுமி,
N.S.S. திட்ட அலுவலர்

"Not me, but you"

என்ற தேசிய நாட்டு நலப்பணித் திட்டத்தின் குறிக்கோளின்படி இத்திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள மாணவிகள் தனக்காக அல்லாமல் பிறருக்காக சேவை புரியும் மனப்பாங்குடையவர்கள். இத்திட்டம் எம்பள்ளியில் 22.12.86 அன்று ஆரம்பிக்கப்பட்டது. இதில் 50 மாணவிகளும் 1 ஆசிரியரும் உள்ளனர். வாரந்தோறும் வியாழன் மாலை 3.30 மணி முதல் 4.30 மணி வரை வகுப்புகள் நடைபெறும். நாட்டு நலப்பணித் திட்ட மாணவிகள் பள்ளி வளாகத்தில் நாள்தோறும் சுத்தம் செய்தல், செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுதல், மிதிவண்டிகள் நிறுத்தும் இடங்களைச் சரி செய்தல் போன்ற வேலைகளை வெள்ளைச் சீருடையில் செய்து வருகின்றனர்.

சுற்றுச் சூழல் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுச் சுற்றுப்புறத் தூய்மை, மரம் நடுதல் போன்ற மக்களுக்குப் பயன்படுகின்ற செயல்களைச் செய்து வருகின்றனர். மற்றும் மருத்துவமனை, முதியோர் இல்லம், மனவளர்ச்சி குன்றிய பள்ளி, பார்வையற்றோர் பள்ளி ஆகிய இடங்களுக்கு ஒவ்வொரு வருடமும் சென்று அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்து வருகின்றனர். இவைகளைத் தவிர திட்ட மாணவிகள் ஒவ்வொரு கிராமத்திலும் சிறப்பு முகாம் நடத்தி வருகிறார்கள்.

| | | |
|---|---|---|
| 1986-87ல் | - | சோலார் சுதந்திராபுரம் |
| 1987-88ல் | - | காட்டுப்பாளையம் |
| 1989-90ல் | - | பூலக்காடு, பள்ளியூத்து |
| 1991-92ல் | - | பெரிய சேமூர் |
| 1993-94ல் | - | சோலார் சுதந்திராபுரம் |
| 1994-95ல் | - | காலனிப்புதூர், சாவடிப்பாளையம் |

ஆகிய இடங்களில் சிறப்பு முகாம்கள் நடத்தப்பட்டன.

சிறப்பு முகாமில் கிராம மக்களுக்கு மாணவிகள் எழுத்தறிவு, கைத்தொழில், கூட்டுறவு, சிறுசேமிப்பு, வீட்டுத் தோட்டம் அமைத்தல், சுற்றுப்புறத் தூய்மை, சுகாதாரம் ஆகியவற்றைக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

ஈரோடு Greeners' Club உடன் சேர்ந்து மரம் நடுதல் நடத்தும் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளும் சான்றிதழ்களும் பெற்றுள்ளனர் ''புன்முறுவலோடு சேவை செய்'' என்ற பள்ளியின் குறிக்கோளின்படி நாட்டு நலப்பணித் திட்ட மாணவிகள் தங்கள் சேவைகளைச் செய்து வருகின்றனர்.

---

## From Our Visitors' Book...

இன்று கலைமகள் கல்வி பெண்கள் உயர்நிலைப் பள்ளியை பார்வையிடும் வாய்ப்பு கிட்டியது. குழந்தைகளின் அறிவுத் திறனையும், ஒழுக்கத்தையும் உணரச் செய்வதில் இப்பள்ளி முன்னோடியாக இருக்கிறது என்பதை உணர்கின்றேன்.

கல்வியில் தேர்ந்து அறிவது முக்கியமானது, 'அறிந்து உணர்தல்' என்பது மிக முக்கியமானதாகும். அந்த அறிவு பெறுவதில் அனைத்து வசதிகளும் கொண்ட பள்ளியாகவும், நல்ல நிர்வாகத் திறமை உடைய தலைமையாசிரியை. செல்வி. முத்தையா அவர்களும், திறமை பெற்ற ஆசிரியைகளும் அனைவருடைய முயற்சியாலும் இப்பள்ளி சிறக்கிறது. வாழ்க! வளர்க!

திரு. ஆர். அருணாசலம்,
மக்கள் நல்வாழ்வு துணை அமைச்சர்,
சென்னை.



எமது பள்ளி விளையாட்டு விழால் அன்னை செல்வி. எம். முத்தையா அவர்கள், ஒலிம்பிக் ஜோதியைப் பெற்று ஆசி வழங்குதல்



வெற்றி மேடையில் எமது மாணவியர்



யோகாசன நிகழ்ச்சி

# தமிழகத்தின் சாந்தி நிகேதனில் மாணவியர் விடுதி

S. Meerabal, M.A. M.Ed., A. H. M., Hr. Sec.



ஒரு பெண் கல்வி கற்றால் ஒரு குடும்பமே கல்வி கற்பதற்கு ஒப்பாகும். இதனை உணர்ந்த உயர்திரு ஐயா. திரு. மீனாட்சி சுந்தரானர் அவர்கள் தென்னகத்து சாந்தி நிகேதனாக விளங்கும் இக்கலைமகள் கல்வி நிலையத்தைப் பெண்களுக்கு நிறுவினார். கல்வி வசதி கிடைக்காத கிராமத்து மாணவியர் தங்கி, கல்வி பயில்வதற்கு ஏற்ற வகையில் விடுதியையும் அமைத்தார்.

ஆரம்ப நிலையில் விடுதி பெயரளவில் ஓட்டுக் கட்டடமாக இருந்தது. மழைக் காலத்தில் சிற்சில நேரங்களில் உள்ளேயும் மழை நீர் வர, அல்லும் பகலும் பாராது அன்னை செல்வி முத்தையா அவர்கள் குழந்தைகளைத் தூக்கித் தோளின் மேல் சுமந்து, தூக்கத்தைத் துறந்து தாயும் ஓர் அன்னையாய் மழை கொட்டாத இடம்தேடி அலைவார்.

ஆரம்ப நிலையில் போதிய வசதியின்றி இருந்த இல்லம், சேவை மனப்பான்மை, கடின உழைப்பு, அயராத முயற்சி ஆகியவற்றின் பயனாய் காண்போர் கண்களைக் கவரும் வகையில் மாடிக் கட்டிடங்களாக, எல்லா வசதிகளும் நிறைந்து இன்று இல்லம் சிறந்த முறையில் இயங்கி வருகின்றது.

இல்லத்திற்குரிய விதிகள் இருந்த போதிலும் மாணவ மாணவியர்களும், ஆசிரியர்களும் அதனை பெருஞ்சுமையாகக் கருதாமல், மனநிறைவோடு மகிழ்ச்சியோடு கடைப்பிடித்து வாழ்கின்றனர். இவ்வில்லம் உண்மையிலேயே அவரவர் பிறந்த இல்லம் போல அமைந்துள்ளது. எல்லா ஜாதி, சமயக் குழந்தைகளும், ஆசிரியைகளும் இங்கு இருக்கின்றனர். எவ்வித மனவேறுபாடும் இன்றி ஒரே குடும்பமாக வாழ்கின்றனர். ஐயா அவர்கள் ஆரம்பித்த சர்வ சமய கூட்டுப் பிரார்த்தனை இன்னும் இல்லத்தில் நடைபெற்று வருகிறது.

எங்கள் இல்லம் எல்.கே.ஜி. முதல் மூன்றாம் வகுப்பு வரை ஒரு பிரிவாகவும், நான்காம், ஐந்தாம் வகுப்புகள் ஒரு பிரிவாகவும், ஆறாம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை ஒரு பிரிவாகவும், ஒன்பதாம், பதினோராம் வகுப்புகள் ஒரு பிரிவாகவும், பத்தாம், பன்னிரண்டாம் வகுப்புகள் ஒரு பிரிவாகவும் பகுக்கப்பட்டு, முறையே பாண்டியன், பாலாறு, அமராவதி, காவேரி இல்லங்கள் என அழைக்கப்பட்டு தகுதியுடைய விடுதி காப்பாளர்களால் கவனிக்கப்பட்டு வருகின்றன.

எல்லா குழந்தைகளும் காலை 5 மணிக்கு எழுந்து காலை 5.45 மணிக்கு காலைப் பிரார்த்தனை செய்கிறார்கள். சனி, ஞாயிறு கிழமைகளில் சர்வ சமய வழிபாடும், சமய வகுப்புகளும் நடைபெறுகிறது. அப்பொழுது சமய பாடல்கள், கீதை, பைபிள், குரான் ஆகிய சமயநூல்களிலிருந்து கருத்துக்கள் படிக்கப்பட்டு விளக்கம் அளிக்கப்படும். விடுதியில் படிப்பதற்கு தகுந்த வசதிகள் செய்யப்பட்டுள்ளது. காலையிலும், மாலையிலும் இறை வழிபாட்டிற்குப் பிறகு எல்லா மாணவ, மாணவியருக்கும் வகுப்பு வாரியாக் இல்லத்து ஆசிரியைகளின் மேற்பார்வையில் படிப்பில் சிறப்பான கவனம் செலுத்தப்படுகிறது.

குழந்தைகளுக்கோ, ஆசிரியைகளுக்கோ உடல் நலம் பாதிக்கப்பட்டால் ஓய்வெடுக்க, நலம் பெற, தனி அறை ஒன்று உள்ளது. உதவியாளர்கள் சிறந்த முறையில் அவர்களுக்கு சேவை செய்கின்றனர். சமய விழா ஆண்டு தோறும் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது.

விடுதியில் வழங்கப்படும் சுவையான உணவு, மாலை நேரங்களில் விளையாட்டு, காலை, மாலை கூட்டு வழிபாடு ஆகியவை மாணவிகளிடையே சிறந்த பண்புகளை உருவாக்க உதவுகிறது. எளிமை, தூய்மை, ஒழுக்கம் ஆகியவை

அவர்களது வாழ்வை சிறக்க வைக்கிறது. ஆம்! இவ்விடுதி மாணவிகள் பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்பு அரசு பொதுத் தேர்வுகளில் சிறப்பான மதிப்பெண் பெற்றுச் சீரோடும், சிறப்போடும் தமக்கும், பள்ளிக்கும் விடுதிக்கும் பெருமை சேர்க்கின்றனர்.

'நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம்' என்றார் புரட்சி கவிஞர் பாரதிதாசனார். இவ்விடுதி வாழ்க்கை முறையும் சிறந்ததொரு பல்கலைக் கழகமாக இயங்கி வருவதற்குக் காரணம் இன்றைய எங்கள் தாளாளர் அன்புள்ள அன்னை திருமதி. மங்களவதி அவர்களின் சிறந்த மேலாண்மையில், விடுதி மேம்பட உழைத்திடும் விடுதி வாழ் ஆசிரியைகளும், உதவியாளர்களும் ஆவர்.

இந்நிலையத்தில் ஆண்டவன் அருள் ஒன்றையே இறுகப் பற்றி வாழ்கிறோம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமை காலை 11 மணிக்கு நிர்வாகி திருமதி. மங்களவதி அவர்கள் தலைமையில் விடுதியில் பணிபுரிவோர் அனைவரும் கலந்து கொள்ளும் பிரார்த்தனை மிகவும் சிறப்பானது. சத்தியத்தையும், ஒழுங்கையும் இரு கண்களெனக் கொண்டு செயல் புரிந்தால் எந்நிலையிலும் வாழ்வு சிறப்பும், செம்மையும் பெற்று அமையும் என்பதற்கு இப்பிரார்த்தனை ஒன்றே சான்றாகும்.

**'We want Man mak'ng Education'** என்ற சுவாமி விவேகானந்தரின் அருள் வாக்குப்படி மனிதன் மனிதனாக வாழும் கல்வியை மாணவியர் பெறுகின்றனர். ஆம்! தொண்டு மனப்பான்மை, ஒழுக்கம், கட்டுப்பாடு, அமைதி இவைதான் இங்கு காணப்படுகிறது.

**அமைதியும், நல்லறிவும் கிடைக்குமிடம் கோவிலன்றோ...**

# கலைமகள் கல்வி நிலையம் பெண்கள் மேல்நிலைப் பள்ளியின் பெற்றோர் ஆசிரியர் சங்கப் பணிகள்

**திருமதி. கற்பகம்,**
P.T.A *இணைச் செயலாளர்*

மாணவியர்களின் ஆன்ம வளர்ச்சிக்கும், உடல் வளர்ச்சிக்கும், அறிவு வளர்ச்சிக்கும் ஒரு வழிப் பாதையாக ஆசிரியர்கள் மட்டும் அல்லாமல், அவர்களின் வளர்ச்சியை ஊக்குவிக்க பெற்றோர்களும் முக்கிய பங்கு பெற பெற்றோர் - ஆசிரியர் சங்கம் ஒரு பாலமாக உள்ளது.

கலைமகள் பெற்றோர் ஆசிரியர் சங்கம் 1967ம் ஆண்டு முதல் நம் நிலையத் தலைவரான திரு. மீனாட்சி சுந்தர முதலியாரின் சீரிய தலைமையின் கீழ் செயல்படத் துவங்கியது. 16-2-84ல் நடைபெற்ற பெற்றோர் ஆசிரியர் சங்கக் கூட்டத்தில் பாரதியார் பல்கலைக் கழகத்தின் செனட் உறுப்பினராக முன்னாள் நிர்வாகி செல்வி M. முத்தையா அவர்களைத் தேர்ந்தெடுத்தமைக்கு, பாராட்டு விழா நடக்க ஏற்பாடு செய்து, பாராட்டியது. மேலும் மாநில விருதும், தேசிய விருதும் பெற்ற செல்வி M. முத்தையா அவர்களுக்குக் கலைமகள் பெற்றோர் - ஆசிரியர் சங்கம் பாராட்டு விழா நடத்தினார்.

1985 ம் ஆண்டு பெற்றோர் ஆசிரியர் சங்கம், கலைமகள் பள்ளியை மேல்நிலைப் பள்ளியாக உயர்த்தவும், மெட்ரிக்குலேஷன் பள்ளி ஆரம்பிக்க இருக்கும் நிர்வாகத்திற்கு உதவ வேண்டும் என்பதற்கான தீர்மானத்தை நிறைவேற்றியது.

1986-87 ஆம் ஆண்டு முதல் திருமதி. S. மங்களவதி அவர்கள் பெற்றோர் ஆசிரியர் சங்க செயலாளராகப் பொறுப்பேற்றார். 1986ல் மாநில அளவிலும், 1992ல் தேசிய அளவிலும் நல்லாசிரியர் விருது பெற்றமைக்காக கலைமகள்



உயர்திரு. ஐபா நினைவாலயக் கட்டிடம்



**S. Sandya**
State First among girls (1972)



Ramya Ramaraj, Std XII

Best Child of the year,
1995 - Academic Performance.



சூசன்னா ஷீலா XII Std.

மாநில முதலிடம் - அறிவியல்
கருத்தரங்கு, சென்னை.



ஆங்கிலப் பள்ளி குழந்தைகளின்
குழு நிகழ்ச்சி



வண்ணத்துப் பூச்சி நடனம்



கராத்தே பயிற்சி

# நல்லாசிரியர் விருதுபெற்ற எமது ஆசிரியப் பெருமக்கள்




தேசிய நல்லாசிரியர் விருதுபெறும்
எம் தலைமையாசிரியை



மாநில நல்லாசிரியர் விருதுபெறும்
மேல்நிலைப்பள்ளித் தலைமையாசிரியை
திருமதி. S. மங்களவதி M.A., M.Ed., அவர்கள்
(1985)



மாநில நல்லாசிரியர் விருதுபெறும் துவக்கப்பள்ளித் தலைமையாசிரியை
செல்வி. E. எலிசபெத் (1993)




கலைமகள் துவக்கப்பள்ளி



தமிழ் இலக்கிய மன்றம்



துவக்கப்பள்ளி ஆசிரியைகளுக்குக் கருத்தரங்கு
நடத்துபவர் உயர்திரு. W.A.F. Hoppar அவர்கள்

# Extra Curricular Activities in Kalaimagal Kalvi Nilayam

Mrs. V. RADHA, M.Sc., M.Ed.,
Mrs. J. ELIZABETH SHANTHI, M.A., B.Ed.,

Our school aims at providing an all round development for students and hence the emphasis is not on acadmic excellence alone but in providing ample opportunities for the students to develop their talents.

## Club activities:

Students are free to join the club of their choice and aptitude. The clubs exisiting are English, Tamil, Maths, Science, G. K. Philately. Games, Craft, Music, Archaeogy and Eco. The activities of the clubs are meticulously planned by teachers incharge. Students are trained to exhibit their talents and skills in creative activities.

## Literary Associations:

The Literary Association aims at developing the skills of the Languages. The variety entertainments staged under the auspices of the English and Tamil Literary Associations include Mono - acting, play acting, composing and reading of poems, recitation, group songs and group dances. The Literary Association of all the departments stage programmes once a term.

Students of the Preparatory and Elementary schools frequently participate in A. I.R. Broadcasts.

## Important Days:

To instill in the young minds a spirit of patriotism, the Independence Day and the Republic Days are celebrated in a fitting manner. Dances emphasizing. National Integration are staged, plays enacted, speeches of great patriots delivered and lives of martyrs recalled. Bharathi Vizha, Mother's Day. U.N.O. Day. Thinking Day and National Integration Days are observed. Our children are regular participants in the District Programmes in the V.O.C. park on National Festival Days. Teachers' Day and Children's Day are celebrated with due importance.

## Unity in Diversity:

The harmony prevailing within the portals of this great and unique institution is made manifest in the festivals celebrated yearly by the staff, Hindus and Christians for Deepavali and Christmas respectively, when parties are hosted and entertainments staged to further strengthen the cord of unity and fellowship among teachers.

## Workshops and Seminars:

In 1978 a workshop was conducted by Dr. W.A.F. Hopper, field advisor, N.C.E.R.T to apprise the teachers of the essentials of evaluation work of Question items in Question Bank. Individual Development workshop comprising of Rapid Reading Course, Memory Technique course and Personality Development Course is frequently conducted by the Cauvery Jaycees for the benefit of students. Museum Awareness workshop was conducted by the Cauvery Jaycees in August '88 in order to educate the students on the historical and cultural importance of antique collections. Awareness Cauvery' conducted by Cauvery Jaycees apprised the students of the environmental degradation and the consequent health hazard, and means of treating the effluents from factories.



சஞ்சயிகாத் திட்டத் துவக்க விழா (1970)



சஞ்சயிகா - மாநில முதல் பரிசு

இரண்டாவதாக வந்தார். 1981ல் G. சத்யா மாநில அளவில் ஐந்தாவது இடத்தையும் பெரியார் மாவட்டத்தில் முதல் மாணவியாகவும் தேர்ச்சி பெற்றார். 1984ல் கணிதத்தில் 34 மாணவிகள் 100/100 மதிப்டெண்கள் பெற்றுள்ளனர். 1986ல் R. உஷா மாநில அளவில் ஐந்தாவது இடத்தையும், K. ஜெகதீஸ்வரி ஆறாவது இடத்தையும் பெற்றார்கள். 1989ல் M. பிரேமலதா மாநிலத்தில் ஐந்தவதாக தேர்ச்சி பெற்றார். 1994-95ல் அறிவியலில் சுரேகா 100/100 மதிப்பெண்கள் பெற்று தேர்ச்சி பெற்றிருக்கிறாள். அதே போல் Matric பள்ளியில் பயின்ற மாணவி ரம்யா ராமராஜ் 93-94ல் மாநிலத்திலேயே முதலிடம் பெற்றது பெருமைக்குரியது. இவரது தகப்பனார் இப்பள்ளியின் முன்னாள் மாணவர். மேல் நிலை வகுப்பில் மாநில அளவில் 1987ல் தாவரவியலில் ஜெயகிறிஸ்டி இரண்டாம் இடமும், R. விஜயா, R. திலகம் மாநில அளவில் Accountancy and auditing பாடத்தில் மூன்றாம் இடமும், K. கீதா மாவட்ட அளவில் முதல் மதிப்பெண்ணும் பெற்றாள். 1989 ல் R.K. செல்வி, சிறப்புத் தமிழில் மாநில அளவில் முதல் மதிப்பெண் பெற்றாள் என்பது பெருமைக்குரிய விஷயம்.

## சிறப்பு வகுப்புகள் :

மாணவிகளுக்குச் சிறப்புத் தேர்ச்சி பெறும் வகையில் அவர்களைப் பயிற்றுவிக்க சிறப்பு வகுப்புகள் காலை 7.30 மணிக்கும், பள்ளி முடிந்த பிறகு 5.30 மணி வரையும் நடத்தப்பட்டு வருகின்றன.

## Three Tier System :

அம்மா அவர்கள் (செல்வி முத்தையா) தலைமை ஆசிரியையாக பணிமேற் கொண்டு செயலாற்றிய காலத்தில் அமெரிக்கா சென்று அங்குள்ள 22 பள்ளிகளில் சென்று பார்வையிட்டு அங்குப் பயிற்றுவிக்கும் முறையை அறிந்து, அம்முறையைத் தம் பள்ளியிலும் செயல்படுத்தினார். கல்வித்தரத்தினை உயர்த்தும் பொருட்டு மாணவிகள் கற்கும் திறனை மூன்று வகையாகப் பிரித்தார். முதல் நிலை, இடை நிலை, கடை நிலை எனப் பிரிக்கப்பட்டு அந்த மாணவிகளின் திறத்திற்கேற்ப கல்வி கற்பிக்க இந்த ஏற்பாடு. முதல், இடை நிலை மாணாக்கியர்கள் எளிதில் புரிந்து கொள்கின்றனர். கடை நிலை மாணாக்கியருக்குத்தான் ஆசிரியரின் உழைப்பு அதிகம் தேவை. பல முறை விளக்கம் தரப்பட்டு அவர்களுடைய நினைவாற்றலை வளர்க்க வேண்டும். அம்மா அவர்கள் ஒவ்வொரு அரசுத் தேர்விலும் 100/100 தேர்ச்சி பெறுவதை நோக்கமாகக் கொண்டு செயல்பட்டு வந்தார். இன்றும் அதேதான் எமது குறிக்கோள். ஆசிரியரும், மாணவிகளும் பாடுபட்டு 100/100 சாதனை படைக்கின்றனர்.

## உபகரணங்கள் :

மாணவிகள் தேர்விற்காக படிப்பதை மட்டும் நோக்கமாகக் கொள்ளாமல் - பாடங்களை நன்கு புரிந்து படிக்க வேண்டும். எனவே, விளக்கங்கள் தருந்த உபகரணங்களைக் கொண்டு போதிக்கப் படுகின்றன. மாணவிகளின் கல்வி வசதிக்காக ஆய்வுக் கூடங்கள், Project room, Geography room போன்றவற்றுடன் பல ஆயிரம் புத்தகங்களைக் கொண்ட ஒரு நூல் நிலையமும், பாரம்பரியம், கலாச்சாரம், ஆகியவற்றைக் கற்பிக்கும் அகழ்வாராய்ச்சி மையமும் அமைக்கப்பட்டுள்ளன.

## ஊக்கத் தொகையும், உதவித் தொகையும் :

எமது பள்ளி, அரசு நிதி உதவி பெறும் பள்ளிகளில் கல்வித் தரத்தில் முதன்மையாக இருப்பது தமிழ் நாடறிந்த விஷயம். எமது பள்ளியில் சிறப்புத் தேர்ச்சி பெறும் மாணவிகளுக்கு ஊக்கத் தொகையும் உதாரணமாக தேசிய படிப்புதவித் தொகை, மாநில படிப்புதவித் தொகை கிடைக்கின்றன. கல்வித் துறையில் வழங்குகின்ற பரிசையும், கலைமகள் சபா போன்ற தனிப்பட்ட அமைப்புகள் தருகின்ற பரிசையும் அதிக அளவில் பெற்று பயனடைகின்றனர். ஏழை மாணவியருக்கு உதவி செய்யும் நோக்கத்தோடு வளர்ப்புப் பெற்றோர் திட்டம் செயல்பட்டு வருகின்றது. இதன் மூலம் மாணவிகள் தங்களுக்குத் தேவையான படிப்புதவிகளைப் பெற முடிகிறது என்பது குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.

## நோக்கம் :

இவ்வாறு எமது பள்ளி பல்வேறு துறைகளிலும் சிறப்புற்று வந்தாலும், ஒவ்வோர் ஆண்டும் தேர்ச்சி பெறுவது மட்டும் நோக்கமாக அல்லாமல் மாநில அளவிலும், மாவட்ட அளவிலும் முதன்மை பெற வேண்டும். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு இவைகளைக் கடைப்பிடித்து எதிர்காலத்தில் தலைசிறந்த கல்வி நிறுவனமாக மென்மேலும் உயர வேண்டும் என்பதை எங்களுடைய நோக்கமாகக் கொண்டு செயல்பட்டு வருகிறோம்.

# கலைமகள் கல்வி நிலையம் துவக்கப்பள்ளி

திருமதி. பமலா பாண்டியன்,
*தலைமையாசிரியை*

எங்கள் பள்ளியாம் கலைமகள் துவக்கப் பள்ளி 1945 ஆம் ஆண்டு எம் ஐயா திரு. மீனாட்சி சுந்தரனார் அவர்களால் துவக்கப்பட்டது. இப்பள்ளி மேன்மேலும் சிறந்து வளர்ந்து வருகிறது. இதற்கு மறைந்த எம் அன்னை செல்வி. முத்தையா B.A., B.T., அவர்களும் முக்கியக் காரணம் என்றால் அது மிகையில்லை.

எம் பள்ளியில் பிள்ளைகளின் உடல், உள்ள, ஆன்ம வளர்ச்சிக்கு ஏற்ற கல்வியை இனிதே கற்பிக்கின்றோம். இலக்கிய மன்றங்கள், விளையாட்டுப் போட்டிகள், ஐயா, அம்மா நினைவுப் போட்டிகள் ஆகியவை நடைபெறச் செய்து மாணவர்களின் திறமையை வளர்க்கிறோம். குழந்தைகளுக்கு நல்ல மனப்பான்மையும், பழக்க வழக்கங்களும் ஏற்பட பல வழிகளில் முயன்று வருகிறோம். வாரந்தோறும் சர்வோதயப் பிரார்த்தனையும், கொடி வணக்கமும் நடத்தி நாட்டுப் பற்று, ஒற்றுமை, சமய சமரசம் ஆகிய நற்பண்புகளைப் பெற வழி வகுக்கிறோம். மேலும் செஞ்சிலுவைச் சங்கம், நீலப்பட்சி இயக்கம் இவை செயல்பட்டு வருகின்றன.

கல்வி கற்பிக்கும் முறைகளில் பல புதிய முறைகளைப் பின்பற்றிக் கல்வி கற்பிக்கிறோம். நவீன உபகரணங்கள் கையாளப்படுகின்றன. மாதந்தோறும் தேர்வுகள் வைத்து மாணவரின் தேர்ச்சியைத் தெரிவிக்கிறோம். பின் தங்கிய மாணவர்க்குத் தனிக் கவனம் செலுத்திக் கல்வி கற்பிக்கிறோம். கல்விப் பயணங்களில் கலந்து கொள்ளச் செய்து மாணவியருக்கு நேர்முக அறிவை வளர்க்கிறோம். வானொலியில் கல்வி ஒலிபரப்பைக் கேட்க வைக்கிறோம். தொலைக்காட்சியில் 'காண்போம் கற்போம்' நிகழ்ச்சியைக் காண வைக்கிறோம். பள்ளியிலேயே கல்வி சம்பந்தமான திரைப்படங்களைக் காட்டுகிறோம். மாணவர்களை வானொலி நிகழ்ச்சியில் மழலையர் பூங்காவில் பங்கு பெறச் செய்கிறோம். சிறு சேமிப்புத் திட்டத்தில் சேர வைத்து சேமிப்பின் அவசியம், சிக்கனம் இவற்றை அறியச் செய்கிறோம்.

மேலும், அரசு ஆணைப்படி புரவலர் திட்டமும், அன்னை ஆசிரியர் கழகமும் சிறந்த முறையில் செயல்பட்டு வருகிறது. எங்கள் துவக்கப் பள்ளிக் குழந்தைகளின் பெற்றோர்களும் நல்ல ஒத்துழைப்புக் கொடுத்து உதவுகிறார்கள். இவ்வாறு, நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக எங்கள் துவக்கப் பள்ளி பொலிவு பெற்று பல்லோர் பாராட்டும் வண்ணம் திகழ்ந்து வருகிறது. எம் பள்ளி நூறாண்டு நூறாண்டு வாழ்க!

# கலைமகளின் சாதனைகள்

Mrs. லில்லி புஷ்பம் மேரி,
*தலைமையாசிரியை, மேல்நிலைப்பள்ளி, கலைமகள் கல்வி நிலையம்*

**சாதனைகள் :**

எமது பள்ளி மாணவிகள் கல்வி வரலாற்றில் சிறப்பு மிக்க சாதனைகள் படைத்துள்ளனர். பத்தாம் வகுப்பு அரசுத் தேர்வில் கடந்த 30 வருடங்களாக 100/100 தேர்ச்சி பெற்றுள்ளனர். மேல் நிலைப் பள்ளி 1987ல் துவங்கப்பட்டு கடந்த 7 ஆண்டுகள் 100/100 சதவீதம் தேர்ச்சியும் இரண்டு ஆண்டுகள் 99.5% தேர்ச்சியும் பெற்றிருக்கிறார்கள். 1985 முதல் எமது Matric பள்ளி செயல்பட்டு வருகிறது. ஆண்டு தோறும் 100/100 தேர்ச்சி பெற்று சாதனை படைக்கின்றனர்.

1965 ஆம் ஆண்டு V. அன்னபூரணி 513/600 மதிப்பெண்கள் பெற்று மாநிலத்தில் 4வது மாணவியாக தேர்ச்சி பெற்றார். 1978 ஆம் ஆண்டு S. சந்திரலேகா 467/500 S.S.L.C. அரசுத் தேர்வில் மாநிலத்திலேயே முதல் மதிப்பெண் பெற்றுத் தேர்ச்சி பெற்றார். அதே ஆண்டில் R. ஈஸ்வரி என்ற மாணவி 462/500 மதிப்பெண்கள் பெற்று மாநிலத்தில்



எம் பள்ளி ஆய்வுக் கூடத்தில்
மாவட்ட ஆட்சியாளருடன் அன்னை



காஞ்சீபுரம் - 1989



S. Chandraleka,
State First (1978)



Ramya Ramaraj,
State First - Matriculation (1994)



V. Sathya,
State Fifth (1981)

நடைபெறும் ஆக்க பணிகளுக்குத் தமது முழுமையான ஒத்துழைப்பை அளித்து வரும் நிர்வாகக் குழு உறுப்பினருக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

## நினைவு இல்லங்கள் :

பள்ளியின் நலனுக்காகவே வாழ்ந்து மறைந்த கல்வித் தந்தை ஐயா அவர்களின் அறையும், அன்னை செல்வி முத்தையா அவர்களின் அறையும் நிலையத்தில் புனித இடங்களாகக் கருதப்பட்டு பிரார்த்தனை அறைகளாக மாற்றப்பட்டுள்ளன. ஏராளமான மாணவியரும், ஆசிரியரும், அலுவலரும் தினமும் இவ்வறைகளுக்குச் சென்று, தங்களுக்கு இப்பள்ளியில் பயிலவும், பணியாற்றவும் வாய்ப்பளித்த இருபெரும் ஆன்மாக்களுக்கு அஞ்சலி செலுத்தி, தம் நன்றியை ஏறெடுக்கின்றனர். ஆன்ம அமைதி அளிக்கும் **சாந்தி இல்லமும், துதி இல்லமும் நிலையம்** உள்ளவரை இறைவனின் இருப்பிடமாகக் கருதப்படும்.

## புதிய கட்டிடங்கள் :

நாற்பதாண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட பழுதடைந்த ஓட்டுக் கொட்டகைகளை நீக்கி, நிலையத்தில் ஆண்டுதோறும் பெருகி வரும் குழந்தைகள், மாணவர் தேவைக்கேற்ப 12 புதிய வகுப்பறைகளும், பொன் விழா மண்டபமும் நிர்மாணிக்கும் பணி ஆரம்பிக்கப்பட்டுள்ளது. துவக்கப் பள்ளியிலும் சீரமைப்புப் பணிகள் நடைபெறுகின்றன.

## அறக்கட்டளைகள் (Endowments) :

பள்ளிக்குத் தன் வீட்டையே தானமாக அளித்த அமரர் **சிவபாத இருதயபிள்ளை,** அவர்தம் துணைவியார் **திருமதி. பார்வதம்மாள்** நினைவாகவும், இறையடி சேர்ந்த கலைமகள் உயிர்நாடியான **அமரர் ஐயா,** நாற்பதாண்டுகள் நிலையத்திற்காக உழைத்த **நிர்வாகி செல்வி முத்தையா** நினைவாகவும், அவர்தம் விருப்பத்திற்கிணங்க, பள்ளியில் பயிலும் ஏழை மாணவியர் பயன் பெறும் வகையில் உதவித் தொகைகள் வழங்கவும், இலவச புத்தகங்கள் சீருடைகள் வழங்கவும், சிறந்த முறையில் தேர்ச்சி பெறும் மாணவியர்க்கு ஊக்கப் பரிசுகள் வழங்கவும், தலா ரூ. 50,000/- மதிப்புள்ள மூன்று அறக்கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இந்த ரூபாய் ஒன்றரை இலட்ச மதிப்புள்ள அறக்கட்டளைகளுக்கான வைப்புத் தொகையிலிருந்து பெறும் வருட வட்டித் தொகை மேற்குறிப்பிட்ட நற்காரியங்களுக்கென செலவிடப்படும்.

இருபது ஆண்டுகளுக்கு மேலாக பாரத சாரணியர் சங்கத்தின் பெரியார் மாவட்ட ஆணையாளராகப் பணியாற்றிய அன்னை செல்வி முத்தையா அவர்களின் நினைவாக சாரண இயக்கத் தந்தை திரு பேடன் பவல் அவர்களின் நினைவுதின சாரண, சாரணிய பேரணி செலவினங்களுக்குப் பயன்படும் வகையில் ரூ. 25,000/- இன்னுமொரு வைப்பு நிதியாக ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதில் ரூ. 5000/- பெரியார் மாவட்ட சாரண சங்கத்தின் உபதலைவர் உயர்திரு. இராதாகிருஷ்ண செட்டியார் அவர்களின் துணைவியார், மறைந்த திருமதி. வரலட்சுமி அம்மாள் அவர்களின் நினைவாகச் செலுத்தப்பட்டுள்ளது.

## ஈகைக்கோர் கலைமகள் :

பொன்விழா ஆண்டில் ஈத்துவக்கும் இன்பத்தினை மாணவியர் அடையும் வண்ணம் ஓர் அரிய சந்தர்ப்பம் அளிக்கப்பட்டது. ஈரோட்டிலுள்ள மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் கட்டிடப்பணிக்கென ரூ. 1,05,000/- உம் சென்னை தொழுநோய்த் தடுப்பு சேவா மையத்திற்கு 95,000/- ரூபாயும் இவ்வாண்டு எமது மாணவியரால் திரட்டப்பட்டு மனமுவந்து அளிக்கப்பட்டன. இதுவே எமது பொன்விழாக் கொண்டாட்டத்தின் முதற்படி. வாங்குவதைப் பார்க்கிலும் ஈவதே மேலன்றோ!

## புரவலர் திட்டம் :

பள்ளிக் கல்வி இயக்குநரின் ஆணைப்படி பள்ளியின் முன்னேற்றத்திற்கென ரூ. 1000/- செலுத்தி எமது மேனிலைப்பள்ளி புரவலர் திட்டத்தில் சேர்ந்துள்ளோர் எண்ணிக்கை இதுவரை 50 ஆகும். இதில் கிடைக்கும் வருட வட்டித் தொகையும் பள்ளியின் முன்னேற்றப் பணிகளுக்காகச் செலவிடப்படும்.

## வளர்ப்புப் பெற்றோர் திட்டம் :

ஒவ்வொரு கல்வியாண்டின் ஆரம்பத்திலும் ரூ. 250/- வழங்குபவர், ஓர் ஏழை மாணவியின் வளர்ப்புத் தந்தையாக இத்திட்டத்தில் சேர்க்கப்படுகிறார். இத்திட்டத்தின் மூலம் இவ்வாண்டு 30 வசதியற்ற மாணவியர் பயன்பெறுகின்றனர். பெற்றோர் ஆசிரியர் சங்கத்தில் இத்திட்டத்தைக் குறித்து அறிவித்தபோது, பரந்த மனமுடைய பல பெற்றோர் உடனடியாக மேடைக்கு வந்து உதவித் தொகையை வழங்கியது

# அண்ணல் காந்திஜியின் அடிச்சுவட்டில் கலைமகள் கல்விக் கூடம்

ஈ.ப. மீனாட்சி, M.A., M.Ed.,
*மு.ப. தமிழாசிரியை, கலைமகள்.*

ஏற்றமிகு எழில் கோலத்துடன் காவிரிக்கரைதனில் விளங்கும் ஈரோடு மாநகர்க்கு ஈடில்லாப் பெருமை சேர்க்கும் பள்ளி கலைமகள் கல்வி நிலையம். சாதனைகள் பல படைத்து பொன் விழா காணும் இப்பள்ளியின் வெள்ளி விழாவில் கலந்து கொண்ட யான் பொன் விழா காணும் பேறு பெற்றமைக்கு இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.

'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்றே மாணவியர் திரியாமல் அவர்களின் ஆன்ம வளர்ச்சி, உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி ஆகிய மூன்றிற்கும் முதலிடம் தந்து நல்வழிப்படுத்தும் இப்பள்ளி கடந்த முப்பது ஆண்டுகளாக நூற்றுக்கு நூறு விழுக்காடு தேர்ச்சி காணும் பள்ளியாக விளங்குகிறது.

சொல்வது எல்லார்க்கும் சுலபமாகும். சொன்னபடி நடப்பவர்கள் மிகவும் சொற்பம். சொன்னபடி நடந்தவர் பாரினில் ஒருவர் உண்டென்றால் நம் தேசப்பிதா அண்ணல் காந்தியடிகளாவர். அவர் வழியில் செல்பவர் இப்பள்ளியின் ஸ்தாபகர், நேர்மையும், அன்பும், எளிமையும் ஓர் உருவம் எடுத்தாற் போன்ற தோற்றம் கொண்டவரான இரு மொழிச் சொற் கொண்டல் உயர்திரு மீனாட்சி சுந்தர முதலியார் அவர்கள். காந்தீய நூற்றாண்டு விழாக் கொண்டாடிய காலத்தில் இப்பள்ளியில் காந்தீயச் சிந்தனைகள் மேலோங்கச் செய்யும் திட்டம் பல கொண்டு வந்தார்.

## பிரார்த்தனை :

இறைவனை வணங்காத நாளெல்லாம் வீணில் கடந்த நாளாகும். "Prayerless life is Powerless life" என்று நினைப்பவர் எங்கள் ஐயா, அன்னை செல்வி. முத்தையா மற்றும் இன்றைய பள்ளித் தாளாளர் திருமதி. S. மங்களவதி அவர்கள். 5000க்கும் மேற்பட்ட பெண் குழந்தைகள் படிக்கும் இப்பள்ளியைப் பிரார்த்தனைதான் கோட்டையாகக் காக்கிறது என்ற அசையாத நம்பிக்கை அவர்களுக்குண்டு. ஒவ்வொரு நாளும் பிரார்த்தனை மாணவியர்களுக்கு நடைபெறுகிறது. பகல் 12 மணிக்குப் பள்ளித் தாளாளர் திருமதி. S. மங்களவதி M.A., M.Ed., அவர்களின் தலைமையில் பள்ளித் தலைமை ஆசிரியைகள் பள்ளிக்காகவும், ஆசிரியர்களுக்காகவும் பிரார்த்தனை நடத்துகின்றனர். மாணவியரும் ஒரு நிமிடம் மௌனப் பிரார்த்தனை நடத்துகின்றனர்.

## சர்வோதயப் பிரார்த்தனை :

நதிகள் பல சேரும் இடம் கடலே! வைரத்தில் எத்தனை பட்டைகள், வைரம் ஒரு பொருளே! நம்மில் எத்தனை இனங்கள், எனினும் நாம் இந்தியரே என்றுணர்த்தும் வகையில் திங்கள் கிழமைகளில் காலை நேரத்தில் சர்வோதயப் பிரார்த்தனை நடைபெறுகின்றது. கீதை, பைபிள், குர்ரான் ஆகிய புனித நூல்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகள் படிக்கப்பட்டும், இம்மதங்களின் பாடல்கள் பாடப்பட்டும் வருகின்றதோடு, சிறந்த சொற்பொழிவும் நடைபெறுகின்றது. பல பெரியவர்களும் இதில் கலந்து கொண்டுள்ளனர். இப்பிரார்த்தனை உள்ளத்தை உருக்கும்; அமைதிப் படுத்தும்.

## ஆன்ம சோதனைக் குறிப்பேடு :

உடல் வளர்ச்சி போல் ஆன்ம வளர்ச்சியும் இன்றியமையாதது. எனவே, ஆத்ம சோதனை நாட்குறிப்பேடு (Self Research Diary) பள்ளித் தாளாளர் அவர்களால் ஒவ்வொரு ஆண்டும் தயாரித்து மாணவியர்களுக்கு வழங்கப் படுகின்றது. இதில் உள்ள வினாக்கள் மாணவியர் நாள்தோறும் தற்பரிசோதனை செய்து குறிக்கும் வண்ணம் அமைக்கப்பட்டிருத்தலோடு, கீதை, குர்ரான், பைபிளிலிருந்து சிறந்த பகுதிகளும் மகாத்மாவின் மணிமொழிகளும் எழுதப்பட்டிருக்கும்.




கவர்னர் மேதகு. பிரபுதாஸ்பட்வாரி
அவர்களுடன் எமது அன்னையும்
புலவர். ராசு. அவர்களும்




கலைமகள் தொல்பொருள் கலைக்கூடம்



நாட்டு நலப் பணித் திட்டத்தில்
எமது மாணவியர்



# தொல் பொருள் அகழ்வாராய்ச்சியில் கலைமகள்

செல்வி பாலசரஸ்வதி,
தமிழாசிரியை
திருமதி. சக்குபாய்,
தமிழாசிரியை

கலைமகள் பெண்கள் மேல்நிலைப் பள்ளி, எண்ணும், எழுத்தும் புகட்டும் வெறும் கல்விக் கூடமன்று, கலைக்கோயில். இல்லை என்ற சொல்லே இங்கே இல்லை. தமிழ்நாட்டின் இதர பள்ளிகளுக்குக் கலைமகள் ஒரு வழிகாட்டி. பெயருக்கேற்ப இங்கு எல்லா வித்தைகளும் கற்றுத்தரப் படுகின்றன. உலக அரங்கில் இடம் பெற வேண்டிய பெருமை இங்குக் குவிந்துக் கிடக்கின்றது. இந்தியாவிலேயே அரசின் அனுமதியோடு அருங்காட்சியகம் அமைத்த பெருமை கலைமகளுக்கு மட்டுமே உரியது. பழங்கால நொய்யலாற்றுப் படுக்கையின் நாகரிகம் பற்றி ஆராயும் சிறந்த ஆய்வுக் கூடமாக விளங்கி வருவது, ஆன்றோரும், சான்றோரும் அறிந்த உண்மை. இது தெய்வம் தோற்று வித்த நிலையம் தெய்வம் நிலைத்து வாழும் நிலையம். கலைமகள் இனிதே வீற்றிருக்கும் நிலையம்.

கொங்கு நாட்டு வரலாற்றுச் சிறப்பை ஆய்ந்து வெளிக் கொணரும் பணியில் மாணவியருக்கு ஆர்வத்தை உண்டாக்கிய பெருமை ஐயா, திரு. மீனாட்சி சுந்தரனார் அவர்களையே சாரும். இதன் விளைவாக 9.4.1978 அன்று கலைக் கூடத் திறப்பு விழா நடைபெற்றது. இக்கலைக் கூடத்தின் சார்பாக வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களுக்குச் சுற்றுலா சென்று வந்தனர். கட்டுரைப் போட்டிகள் நடத்திப் பரிசுகளும் அளிக்கப்பட்டன. ஐயா திரு. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் நினைவாக கலைமகள் மீனாட்சி சுந்தரம் தொல்பொருள் ஆய்வு மையம் [Kalaimagal Meenakshi Sundaram Archaeological Learning and Research Centre (KAMALARC)] 11-3-1981 அன்று மாண்புமிகு. முன்னாள் முதல்வர் திரு. எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டது. இந்த ஆய்வுக் கூடம் அன்னை செல்வி. முத்தையா அவர்களின் அரிய முயற்சியாலும் புலவர் செ. இராசு அவர்களின் துணையோடும் படிப்படியே வளர்ந்து இன்று சீரோடும், சிறப்போடும் இப்பள்ளியின் புகழைப் பாரெங்கும் பரப்புவதில் தன்னிகரற்று விளங்குகிறது.

ஆய்வுக் கூடத்தின் அரிய கண்டு பிடிப்பு பற்றி இனிக் காண்போம்.

## கற்சிற்பங்கள் :

கலையழகுடன் விளங்கும் முருகன், அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான கண்ணப்ப நாயனார், கஜலட்சுமி, கவரி வீசும் பணிப்பெண், கங்கரையர் காலத்தில் போரில் வீர மரணம் அடைந்த போர் வீரன், சாகாடன், நக்கன், அழகுத் திருமேனியுடன் பரிவாரத் தெய்வங்களும் சூழ வீற்றிருக்கும் ஈங்கூர் ஐயனார், கழுத்தில் மணி வேலைப்பாடுகளுடன் கூடிய நந்தி, பைரவர், சண்டேசுவரர், தட்சிணாமூர்த்தி, சிவலிங்கம், நாகர், விநாயகர், வரலாற்றுச் சிறப்புமிக்க காளிங்கராயன் சிலையும், பால தொழு அம்மன் சிலையும், துவார பாலகிகள் ஆகிய சிலைகள் சிற்பக் கலைக்கு அரிய எடுத்துக்காட்டுகளாக விளங்கி வருவதைக் கண்டு மகிழலாம்.

## கல்வெட்டுகள் :

வணிகர் குழு தங்குவதற்காக எடுத்த மாநகரம் பற்றிய கல்வெட்டு, மக்களுக்காக ஏரி ஒன்றை ஏற்படுத்திய செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டு, வாய்க்கால் அமைத்த கல்வெட்டு ஆகியவற்றால் சேர, சோழ, கொங்கு மன்னர்கள் மக்களுக்குச் செய்த நன்மைகளை அறியலாம். முடவர்களுக்காகக் காப்பு நிலையம் ஒன்றை அமைத்த செய்தியைப் பதினாறாம் நூற்றாண்டைச் சார்ந்த விஜய நகரத் தூண் ஒன்று அறிவிக்கிறது. இவை போன்ற கல்வெட்டுக்கள் பல உள்ளன.

## மங்கலச் சிற்பங்கள், உலோகப் படிமங்கள்:

நடராசர், நர்த்தனக் கண்ணன், குழலூதும் கண்ணன், தவழும் கண்ணன், திருமால், பெண் அடியார், அர்த்த நாரீசுவரர், ஊர்த்துவத் தாண்டவர், இராமர், இலக்குவன் சீதை, புத்தர் போன்ற படிமங்கள் உள்ளன.

# COMPETITIONS

**Mrs. Rachel Florence, B.Sc., M.Ed.,**
Science Assistant.

The school curriculum provides time in the syllabus only for teaching a subject, but the extracurricular activities bring out the child's hidden talents. Our Founder Iyyah was keen to see that children were not merely book worms, but moulded and shaped in the hands of the teacher.

Our Amma the Architect of this Great Institution was not merely satisfied with the excellent performance of the children in their Public Examinations alone. She wanted our school to be the No. 1 in all activities and hence as per her wish, ample chances are given to the students to bring out their latent talents and skills by taking part in various competitions such as oratorical competitions both in English and Tamil, Essay competitions Tamil and English, Drawing, Music and Dance competitions.

Iyyah Memorial competitions are conducted in our school itself. Every year, students participate in the various competitions conducted and they are given prizes to encourage them. I am proud to say that our K.K.N. chidiren are privileged to take part in the District Level Competitions, State Level and even National Level Competitions.

Our school has taken part in all the competitions that are conducted by Rotary Clubs, Ramkrishna Vidhyalaya, Sadhbhavana, Co-operative Society, Human Welfare Department, Postal Dept. etc. Whatever competitions are conducted by various Institutions and Departments, our children are to be found on the stage to do their best. They have done their best and have come out in flying colours. Mostly in all competitions our students secured the I or II place.

K.K.N. is really gifted in having excellent singers, artists, orators, actors and dancers (children). B.K.B. Jayanthi of XII 'A' participated in state level Quiz Competition held in Madras. M. Bharani of IX 'B' took part in oratorical competition conducted in Dt. Level and got I Prize. She participated in the State level Science Seminar held in Madras on 27. 7. 90.

A state level Sathbavana Essay writing competition was held by the Govt. of India, Ministry of Human Resource Development, New Delhi. Our student M. Maduraveni was selected first to participate in the National Level Quiz Competition. Susanna Sheela XII 'A' took part in the Essay competition conducted by 'Sadhbhavana'. She was selected to participate in the National Level Competition at Delhi. Our children took part in Karate Competition conducted by the Karate Club of Periyar Dt. J. Malarvizhi - VIII 'A' got I place (Rolling Cup). The prize was given by Hon. Thiru. K.A. Sengottaiyan our Transport Minister.

The Federation of Management of Eduational Institutions conducted a State level extempore drawing competition. 19 of our students participated. K.L. Sudha XII 'B', P. Nithya VIII 'A', E.G.S. Deepa VIII 'A' won State Level merit prizes.

National Level essay competition was conducted by U.S.O. Delhi on Road Safety. Anbu Paula of Std XI got III prize and Swapna Joseph got Consolation Prize. They were given

# இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம்

**திருமதி. காந்திமதி,**
*J.R.C. பொறுப்பு ஆசிரியை.*

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த சான்றோர்களுள் ஹென்றி டுனாண்ட் என்பவரும் ஒருவர். இவர் போரில் புண்பட்டோரின் துயர் துடைக்க செஞ்சிலுவைச் சங்கத்தைத் தோற்றுவித்தார். இச்சங்கத்தின் கோட்பாடுகள் 1. உடல் நலம் பாதுகாத்தல் 2. பிறருக்குத் தொண்டு செய்தல் 3. உலக நட்பைப் பரவச் செய்தல்.

நம் பள்ளியில் கடந்த 25 ஆண்டுகளாக இச்சங்கம் செயல்பட்டு வருகின்றது. 95 மாணவியரும் நான்கு கவுன்சிலர் பயிற்சி பெற்ற ஆசிரியைகளும் இச்சங்கத்தின் உறுப்பினர்கள். பள்ளியின் அமைதி, தூய்மை ஆகியவற்றைக் கவனித்தல், முதியோர் இல்லம், விழியிழந்தோர் இல்லங்கள் ஆகியவற்றிற்குச் செல்லல் ஆகிய செயல்களில் சங்கம் ஈடுபட்டு வருகிறது.

வியாழக்கிழமை தோறும் ஒன்று கூடி சுகாதாரப் பழக்கங்களை வலியுறுத்தல், சான்றோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்தறிதல், கைவினைப் பொருட்கள் செய்தல் ஆகியவற்றிலும் ஈடுபட்டு வருகின்றது. உயர்நிலைப் பள்ளியிலும், மெட்ரிகுலேஷன் பள்ளியிலும் இவ்வியக்கம் சேவை மனப்பான்மையை வளர்க்கும் வகையில் சிறந்த சேவை செய்து வருகின்றது. வளர்க எம் பள்ளி!



# GOLDEN GATES

**Mr. P. RAMRAJ,** MA BGL PGDBA PGDMM
(Manager, Old Student.)

Kalaimagal Kalvi Nilayam, to me, is a kaleidoscope of pleasant memories.

Absorbing day-long English classes by the revered Founder, Iyyah, science exhibitions, afternoon cricket matches, grand Annual Day celebrations, exhilarating 'centum' jubilations, armloads of prizes, hot flag hoisting Monday mornings, stern lectures on discipline and many more cherished remembrances that "flash upon the inward eye" if I may borrow the apt phrase from Wordsworth.

Tens of thousands of students have crossed these golden portals of learning and the education of Kalaimagal has always stood them in good stead, whatever their calling has been in life.

Sacrificing their entire lives, Iyyah and Madam Muthiah or Amma, as she was affectionately and reverently called and remembered, have set glorious examples to inspire our beloved and respected Correspondent, Madam Mangalavathy to steer Kalaimagal as they would have themselves done.

In its fifty eventful years of proud existence, Kalaimagal has risen to great heights and it is our fervent hope and prayers that the future holds much greater promise.

With the unstinting support of the devoted coordinator, Madam Joseph, the untiring efforts of the Headmistress, Mrs Lily Pushpam Mary and the army of highly motivated, dedicated and determined teachers, the future of Kalaimagal is secure under the captaincy of Madam Correspondent.

On behalf of the old students and parents and in all humility and sincerity, I wish Kalaimagal Kalvi Nilayam the best of everything with endless years of achievement and glory.

# THE ETERNAL TREE

**RAMYA RAMRAJ** XII - 'A'

When into placid lakes poisonous waters flow,
And verdant forests laid bare with the axe's blow,
When fresh air is captive with snow and mist,
And even a blade of grass begins to list,

I found a garden beautiful and bright.
Full in bloom - indeed a poet's sight!
In the middle a benevolent tree found
Tall with generous branches hovering around.

# சரித்திர நாயகி

கே. எஸ். மோ...

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று"

என்னும் வள்ளுவரின் வாய்மொழிக்கிணங்க இவ்வுலகில் தோன்றியவர் நமது அன்னை "செல்வி...

இப்பூவுலகின் கலைமகளாம் நம் அன்னையின் பாதங்களை வணங்கி 'சரித்திர நாயகி' என்...
தொடங்குகின்றேன்.

புரட்சித் திங்களான 'மே' திங்களில் 1928 ஆம் ஆண்டு ஐந்தாம் நாள் நமது சரித்திர நாய...
பூமியில் தோன்றியவர்.

1955 ஆம் ஆண்டு ஜூன் 5 ஆம் நாள் கலைமகளின் தலைமை ஆசிரியை பொறுப்பேற்...
தம்மை அர்ப்பணித்துக் கொண்டார்.

"கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதராகும்மே!"

என்பது ஆன்றோர் வாக்கு. எனவே, "கல்வி பெற்றவன்தான் முழு மனிதன்" - என்பதை உண...
நல்ல கல்வியை நாளும் வளர்ப்பதில் நாயகியாக விளங்கினார்.

உலக அரங்கில் வெண்ணிலவாய் வலம் வந்த, இந்தியாவின் முன்னாள் பிரதமர் திருமதி. இந்திரா...
நமது அன்னை, 'சரித்திர நாயகி' அவர்கள் பாராட்டும், பரிசும் பெற்றார்.

தொடர்ந்து 30 ஆண்டுகளாக பள்ளி இறுதித் தேர்வில் நமது பள்ளி 100 சதவீத தேர்ச்சி பெற்ற...
வெற்றியின் பின்னணியில் இருந்து இயக்கியவர் நமது அன்னை அவர்கள்.

'பெரிய டீச்சர்' என்று மட்டற்ற மரியாதையுடனும், பாசத்துடனும் அனைத்துப் பள்ளி...
அழைக்கப்பட்டவர்.

தேசிய அளவிலும், மாநில அளவிலும் பட்டங்களும், பரிசுகளும் அவரை நாடி வந்தன. தொ...
நாகரீகத்தை உலகிற்குக் காட்டிய 'வரலாற்று நாயகி' அமெரிக்கா சென்று வந்து மேலும் பல கல்விச் சா...

தமிழ் நாட்டின் 'சாந்தி நிகேதனாய்' விளங்கும் 'கலைமகளின்' ஒவ்வொரு அணுவிலும் நமது அ...
கலந்துள்ளார்.

மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா!

என்று பாடிய பாடலும்,

'பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்!'

என்ற பாரதியின் பாடலும், நமது 'சரித்திர நாயகி'யின் வடிவில் நற்றொண்டு புரிந்தன.

அன்னையின் வழியில் செல்வோம்!
அவர்தம் புகழைக் காப்போம்!
விண்ணிலே இருந்து நம்மை
வழிநடத் திடவே கேட்போம்!



AMMA WITH SR. CHANTAL OF OLDAGE HOME, THINDAL.



கொங்கு அறிவாலய மனவளர்ச்சி குன்றிய
குழந்தைகள் இல்லத்தின் நிர்வாகி.
திரு. இராஜேந்திரன் காசோலை பெறுகிறார்.



தொழு நோய் நிவாரண
நிறுவனத்திற்கு நிதி வழங்குதல்

# விளையாட்டரங்கில்
# கலைமகள் கல்வி நிலைய மாணவியர்கள்

திருமதி. முத்து லட்சுமி,
உடற்கல்வி இயக்குனர்,

கலைமகள் கல்வி நிலைய மாணவியர்கள் அனைவரையும் ஆண்டுதோறும் ஆரம்பத்தில் ஒன்றாகக் கூட்டி நான்கு குழுக்களாகப் பிரித்து, ஒவ்வொரு குழுவிற்கும் நீலம், மஞ்சள், சிவப்பு, பச்சை எனப் பெயரிட்டு, ஒவ்வொரு குழுவிற்கும் தலைவியைத் தேர்ந்தெடுப்போம். பள்ளியில் மாலை 4.30 மணி முதல் 5.30 மணி வரை மாலை நேர விளையாட்டுகள் நடைபெறும். ஒவ்வொரு ஆண்டும் பள்ளியில் விளையாட்டு விழா (Annual Sports) நடைபெறும். அவ்விளையாட்டு விழாவில் வெற்றி பெற்ற மாணவிகளுக்குப் பரிசுகளும், சான்றுகளும் வழங்கப்படும். அத்துடன் மாணவிகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

மாவட்ட அளவில் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெறும் பள்ளிகளுக்கு அரசு ஒவ்வொரு விளையாட்டிற்கும் ரூ. 10,000/- ஊக்கத் தொகை வழங்கியுள்ளது. அதில் எம் பள்ளி மாணவிகள் ரூ. 1,20,000/- பெற்றுள்ளனர்.

விளையாட்டுப் போட்டிகளுக்கு மாணவிகளைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குக் காலை 7.30 மணி முதல் 9 மணி வரையிலும் மாலை 4.30 மணி முதல் 5.30 மணி வரையிலும் சிறப்புப் பயிற்சி அளிக்கப் படுகிறது. கடந்த 15 ஆண்டுகளாக எம்பள்ளி மாணவிகள் குறுமையம், மாவட்ட அளவில் நடைபெறும் போட்டிகளில் பங்கு கொண்டு விளையாடி வெற்றி பெற்று தொடர்ச்சியாக aggregate எடுத்து மாவட்ட அளவில் முதலிடத்தைப் பெற்று வந்துள்ளனர். மாவட்டம், கோட்ட அளவில், மாநில அளவில், தேசிய அளவில் நடைபெறும் போட்டிகளில் பங்கு கொண்டு விளையாடும் தகுதிகளைப் பெற்றுள்ளனர். 1994-95 ஆம் ஆண்டு மாநில அளவில் புதுக்கோட்டையில் நடைபெற்ற பாரதியார் தின விழாப் போட்டியில் சிறகு பந்தில் 2வது இடத்தைப் பெற்றுள்ளனர்.

பெரியார் மாவட்ட விளையாட்டு மன்றம் மற்றும் விளையாட்டுக் கழகங்கள் நடத்தும் போட்டிகளில் மாணவிகள் பங்கு கொண்டு வெற்றி பெற்றனர். 1986-87 ஆம் ஆண்டு மிக இளையோர் பிரிவில் கோ-கோ போட்டியில் வெற்றிபெற்று தங்கப் பதக்கங்களும், சான்றிதழ்களும் பெற்றுள்ளனர். 1984-85 ஆம் ஆண்டு ஊரக விளையாட்டுப் போட்டியில் R. வசந்தி தேசிய அளவில் கூடைப் பந்தாட்டத்தில் தங்கப் பதக்கத்தை வென்றாள். 1990-91 இல் T. கோமதி, லாவண்யா தேசிய அளவில் கோ-கோ போட்டியில் கலந்து கொண்டு ஒரிசாவில் விளையாடினர். ஈரோடு, வ.உ.சி. பூங்காவில் தேசிய அளவில் நடைபெற்ற 16வது மகளிர் கையுந்து பந்து போட்டியில் N. கவிதா பங்கு கொண்டு விளையாடினாள்.

தமிழ் நாடு கல்வி இயக்குநரால் நடத்தப்படும் School games federation போட்டியில் தேர்வு செய்யப்பட்டு தேசிய அளவில் நடைபெறும் போட்டியில் பங்கு கொண்டு விளையாடி வருகிறார்கள். மாணவிகளுக்குப் பாரதியம், யோகாசனம் போன்ற பயிற்சிகள் பள்ளியில் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. J.R.C. Club ஆரம்பித்து அதில் மாணவிகளுக்கு வாரந்தோறும் வியாழன் மாலை 4.30 மணி முதல் 5.30 மணி வரை பயிற்சி கொடுக்கப் படுகிறது. இவற்றுடன் பிரப்ரேட்டரி, மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி மாணவ, மாணவிகளுக்குக் கராத்தே பயிற்சிகள் மாலை 4 மணி முதல் 5 மணி வரை அளிக்கப்படுகின்றன. மாவட்ட அளவில் நடைபெறும் கராத்தே போட்டியில் கிருபா, பொன்மணி பங்கு கொண்டு போட்டிகளில் வெற்றி பெற்று பரிசுகளும் சான்றிதழ்களும் பெற்றுள்ளனர். 1994-95 ஆம் ஆண்டு பாரதி வித்யா பவனில் மாவட்ட அளவில் நடைபெற்ற போட்டிகளில் பிரப்ரேட்டரி மாணவன் சா. ரீகன், V Std மாவட்ட அளவில் முதலிடத்தைப் பெற்று மாநில அளவில் நடைபெறும் போட்டியில் கலந்து கொள்ளும் தகுதியினைப் பெற்றுள்ளான்.

# நன்றி! நன்றி! நன்றி!

'கலைமகள்' மேனிலைப்பள்ளி, துவக்கப்பள்ளியின் புரவலர் திட்டத்திற்கு 1,000/- கொடுத்துதவிய பெற்றோர்க்கு எம் நன்றி.

எமது பள்ளியின் வளர்ப்புப் பெற்றோர் திட்டத்திற்கு வருடம் ரூ. 250/- அளித்து வசதியற்ற மாணவியர்க்குப் புத்தகம், சீருடை வாங்க உதவி செய்கின்ற பெற்றோர்க்கு எமது நன்றி.

எமது ஏழை மாணவியர் 10 பேருக்குப் புத்தகப் பணம் வழங்கிய ஈரோடு State Bank of Mysore, மானேஜருக்கு எம் இதயங்கனிந்த நன்றி.

பொன் விழாக் காணும் கலைமகளுக்குத் தமது குழந்தைகள் மூலம் பண உதவி செய்த அனைத்துப் பெற்றோர்க்கும் எம் நன்றி.



means, they totally get confused and never concentrate on it. Very little idea about computer is enough in this stage and age.

## HIGH SCHOOL LEVEL:

The children studying in the classes from VI TO VIII can be taught with more details of the computer hardware such as units of the computers (INPUT, OUTPUT, CPU ETC) and demonstration way of introducing the peripherals. The concept of binary and its usage in computers can be taught here. But here also, major attention must be given for educational sofrtwares consisting of the subjects mathematics, science, social science etc as said earlier. Even for the languages, we can make use of it.

For example, an English teacher can utilise the computer as an educational aid for teaching poems (with rhyme scheme), different animations related to that poem etc, and also can teach grammar for explaining various objects (noun), their action (verb), the enhanced features of the objects (adjective) along with all kinds of tense forms.

The mathematics teacher can make use of this machine to teach factorisation, solving linear or simultaneous equations, mensuration using different graphics.

Many can see when children of primary and high school level entering the computer lab, they at once put forth the question, "Is there any computer game?" from which we know that it is an obvious fact that they understand and enjoy facts through animation rather than learning the parts of computers or writing programs of their own.

The students studying in 9th and 10th standards can be taught with porgramming languages of interactive nature like BASIC. Because Basic is the easiest one and one learns the concepts in Basic, learning other languages become easier and also students can feel very free in developing programms in Basic since it won't flabber gast them . They can also be taught to operate different packages independently.

To put in a nutshell the children who complete their high school education are totally free from the fear of operating computers and acquire a piece of knowledge in program developing which leads them to think and act logically also.

## HIGHER SECONDARY LEVEL:

With the knowledge gained upto the high school level, the higher secondary level students who are by themselves matured enough and possess self thinking can be taught with any of the programming language or package, because analytical thinking is developed highly in this age.

Here also a great point to be remembered is that though one particular language or package is taught to them, the practical exercises that are given to them must be related to their subject since they can put themselves into a career in future based on the subjects they take in their higher secondary course under part-III.

In March '79 Dr. Raju, Reader, Regional College of Education, Mysore visited Kalaimagal Kalvi Nilayam in connection with the publication of Educational Innovations carried out by the Institution to be brought out by U.N.E.S.C.O. and N.C.E.R.T. He appreciated the various projects especially the Archaeological Project and expressed his wish that it should be recognised at the International level and given autonomous status at the school level.

A seminar on 'Life Oriented Education' for Periyar and Nilgiris Districts was conducted in December 1984 under the Presidentship of the Director of School Education, Madras. Dr.W.A.F. Hopper was the resource person. In February '86 an inservice course in Mathematics was conducted by Mrs. Mangalavathy. From June '87 National Education Policy course was conducted in our school for a duration of 40 days. The then headmistress Mrs. S. Mangalavathy as the Course Director and key Resource Person did a commendable job.

## Excursions:

'Up, Up, my friend and quit your books or surely you'll grow double'is Wordsworth's advice. Once in a way we have got to quit our books, and go out into the open to hear and enjoy the melodious songs of Nature. Every year field trips and educational tours are arranged for staff and students of all classes from L.K.G to Std XII. Most of the annual tours are arranged in and around Tamilnadu, while occasionally long tours are arranged. In '78, 102 Students and 29 teachers went to Srilanka during the Quarterly Holidays. In '84, 70 students and 8 staff members went to Delhi and Kashmir for a fortnioght. Tours to Hyderabad, Bombay, Simla, Darjeeling, Udaipur, Jaipur and Mount Abû were arranged in '87 and '89.

## Charity begins at home:

The mark of a good Educational Institution is to produce worthy citizens and it is said that 'a good citizen is the one who earns money by noble profession and spends it for the welfare of mankind'. Children are motivated to give liberally to the poor, the disabled, the suffering and the down trodden. We are indeed happy about the voluntary contributions made by our students and staff to various voluntary organisations that champion the cause of the 'Les Miserables'.

Under the 'Village adoption scheme' the staff and N.S.S. students of our school have rendered Voluntary Services in Periyasadayan Palayam, Asokapuram and Solar Sudanarapuram for the upliftment of the inhabitants there. Contributions were made in kind and literacy campaigns launched. Medical facilities were made available for the villagers.

In January '80, an amount of Rs. 83931 was contributed to the President, Mr. Pearson of Helpage International through 'Sponsored Walk' programme.

In November '81 a considerable amount was raised for the mentally retarded and disabled through a variety entertainment staged by our students. The school donated Rs.2000 in August '82 towards the Noon Meal Scheme. Our students made a liberal contribution of toys. In November 86. A general contribution of Rs. 32,750 was made to leprosy Mission, India. In February '87 students donated Rs. 10,000 towards the Amorican Earthquake Relief Fund. An amount of Rs. 62,806 was donated to the Director of Rehabilitation Centre for the Blind. Rs. 10000 was donated to Old age Home in Thindal, Perundurai. Our teachers visit the Home for the aged and the Rehabilitation Centre for the Blind on festival days with gifts.

As a gesture of gratitude to God for the Golden Jubilee Celebrations two charitable projects were taken in the year 1994, one by the children of Primary School and Higher Secondary School in which an amount of Rs. 1,05,000 was collected and handed over to, the Home for the Mentally Retarded, Erode and the other by the Preparatory and Matric children in which an amount of Rs. 96,000 - was collected and sent the Leprosy mission India - New Delhi.

over the torch to Mrs. Mangalavathy, the present Correspondent.

One marvels how beneath her unassumingly simple exterior lies concealed a treasure house of rare virtues. She breathes a prayer before she draws a plan, sustains it with care and concern and fulfils it with tearful thanks to Heaven. This is the secret of her indomitable courage and her unswerving will.

Choosing to remain in obscurity, the present Co-ordinator Mrs. Felicia Joseph with her radiant smile spreads around her the fragrance of good will and cheer. Her benign presence in the school leaves a touch of grace in everything she does. As a student of yester years and as a staff now, I have always espied these two angelic personalities with reverential awe and it will be no exaggeration to say that their inspiring images are deeply engraven in the hearts of many. Truly they are God-given gifts to the school and to the society.

Tempests have raged, yet together they stayed, clung to the Master's feet when tossed by rending storms, seeking to hear the guiding hush of His still small whisper. With their dynamic leadership, with the choicest heads of various departments assisted by a team of devoted and persevering teachers, the school is certain to create anew another glorious era of multifaceted excellence.

This solemn temple of learning wrought by immortal hands, guarded by a host of angels, sustained by His abounding grace and led by His unseen hands will grow from strength to strength and burnish her achievements into legend.

# DARKNESS

**V. Lavanya XII 'A'**

When there is darkness deep within you
And black despair surrounds you
When hope begins to fade away
And the days look empty and grey
When you see another shed a tear
Eventhough life is not very near or dear
When you begin to feel the weight of life
And see around you discord and strife
Then remember to light a lamp of hope
That will dispel the darkness and doubts away
A lamp of goodness and cheer
For yourself, strangers those near and dear
This is the reason to smile away sorrow
And forget the past pain
So lit a lamp within your heart
And remember that it is never
Too late to start

# எதிர்கால இந்தியனுக்கு

K. லாவண்யா X 'A'

இந்தியனே!
தாய் நாடு தாயினும் மேலானது.
வீறு கொண்ட இந்தியா விழித்தெழட்டும்
விழுப்புண் பட்ட இந்தியா
விடுதலைக் காற்றை சுவாசிக்கட்டும்
விவேக மிக்க இளைஞனே!
வீரம் கொள்
ஆட்டியவர்களை ஆட்டிப்படை
அடக்கியவர்களின் அகங்காரம் அடக்கு
விந்தை படட்டும் உலகம்
உன் விந்தையைக் கண்டு.
இனத்தில் வித்தியாசம் பாராதே
குணத்தில் வித்தியாசம் காட்டு
அப்போது
பாரெல்லாம் உன்னைப் பாராட்டும்
பட்டுப் பாய் விரித்து.
சாதியில்லை, மதமுமில்லை, இனமுமில்லையே
இந்தியனாய் இருப்பதிலே தாழ்வு இல்லையே
என்ற எண்ணம் கொள்
உதவி என்று வந்தவன்
உள் நாட்டுக் காரனா
உன் பகைவனா எனப் பாராதே
உன்னிடம் உள்ளதைக் கொடு
உள்ளன்பு கொள் உதவி செய்
உழைப்பை உன் கரங்களில் அடக்கு
உலகம் உன் விரல் நுனியில் அடங்கும்
இமயம் தொட்டுக் குமரி வரை
இந்தியன் என்ற எண்ணம் கொள்
உன் மன எல்லைகளின்
குறுக்கம் நீக்கு
பரந்த உலகைப் பார்
படிக்காதவைகளும்
பாரில் இருப்பது தெரியும்
தகர்த்தெறி தயங்கிய நெஞ்சை
தடுமாறாத சொல் கொண்டு
தரணியில் சிறந்த நாட்டை
உருவாக்கிட எழுந்திரு!

# உன்னால் முடியும்

வி. செல்வலஷ்மி, 10ம் வகுப்பு 'ஆ'

மனமே
வேதனையடையாதே,
இயற்கையைப் பார்,
அதில் பூத்துக் குலுங்கும்
பூக்களைப் பார்
அதன் அழகை இரசிப்பாய்
ஆனால்
அதன் வாழ்நாள் ஒரே நாள்
ஒரே ஒரு நாள்
இருக்கும் ஒரு நாளில்
எத்தனை கோடி மக்கள்
எத்தனை கோடி மக்கள்
பூவிற்கு அடிமையாகின்றார்கள்
உன்னை நினைத்துப் பார்
உன் வாழ்நாளை நினைத்துப் பார்,
உன்னால் முடியாதது எத்தனை?
ஒன்றும் இல்லை
ஒரு நாளில் கோடி மக்களை
அடிமையாக்குகின்றது,
ஓர் பூ
ஆனால் நீயோ
எத்தனை மாதங்கள்
எத்தனை ஆண்டுகள் வாழ்கின்றாய்
உன்னால் எதுவும் முடியும்
உன்னுள் தூங்குகின்ற உன் திறமைகளைத்
தட்டி எழுப்பு
உன்னை நீ அறிந்து கொள்
உன் கடமையைச் செய்
உன்னைச் சுற்றி வர
ஆயிரம் கோடி மக்கள்
ஆயிரம் கோடி மக்கள்

# அறிவுப் பூஞ்சோலை

**Mrs. Muthulakshmi Ragavan, M.A., M.L.I.S.,**
Librarian

'கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம்'
'கல்வியை உடைய பெண்கள் திருந்திய கழனி'

பாவேந்தர் பாரதிதாசன் பெண்களின் கல்வி நிலையைச் சமுதாயத்தின் அடிப்படையில் 'பயனற்ற களர்நிலம்' என்றும் 'திருந்திய கழனி' என்றும் படம் பிடித்துக் காட்டும் பாங்கு போற்றுதற்குரிய தொன்று. பெண்கல்வியைப் பாரினில் அளிக்க முன்வந்த எத்தனையோ நல்ல உள்ளங்களில் 'ஐயா' என நம்மால் என்றும் அழைக்கப்படும், திரு. மீனாட்சி சுந்தரனார் தலைசிறந்தவர். ''ஒரு பள்ளியைத் திறப்பவன் நூறு சிறைச்சாலைகளை மூடுகின்றான்'' என்ற பிரெஞ்சுப் பழமொழிக்கேற்ப தன்னலம் கருதாத் தகைசால் பெருந்தகை இக்கலைமகள் பள்ளியைப் பெண்களுக்கென ஈரோட்டில் நிறுவினார்.

நூலகம் சென்று படிக்காமல் ஆசிரியருக்கும், மாணவருக்கும் உண்மையான தொடர்பு இருக்க முடியாது என்பதை உணர்ந்த ஐயா அவர்கள், தன் தாயின் நினைவுச்சின்னமாக சிறிய 'நூலகம்' ஒன்றை ஆரம்பித்தார். 'Library is a growing organism' என்ற திரு. S.R. Ranganathan அவர்கள் கூற்றுப்படி கலைமகள் நூல் நிலையம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து நூலகத்திற்குரிய அனைத்து வசதிகளுடன் சிறந்த பள்ளி நூலகமாக விளங்குகிறது. ஆசிரியர்களும், மாணவியரும் நல்ல நூல்களை எதிர்பார்த்தே நூலகம் நோக்கி வருகின்றனர். இவர்களின் தேவையை நிறைவு செய்யும் வகையில் எண்ணிலா வகையில் நூல்கள் இடம் பெற்றுள்ளன.

எங்கள் பள்ளி நூலகத்தில் 20,000 புத்தகங்கள் உள்ளன. 8,000க்கும் மேற்பட்ட தமிழ் புத்தகங்களும், 10,000 ஆங்கிலப் புத்தகங்களும், 1500 (Reference) ஆய்வு புத்தகங்களும் உள்ளன. மாணவியர் தம் பிறந்த நாள் விழாவைக் கொண்டாடும் நன்னாளில் நூலகத்திற்கு நல்லதொரு நூலை வாங்கி பரிசாக (Birthday Gift) வழங்கும் வழக்கம் சிறப்பிற்குரிய ஒன்றாகும். Class Library Books என்று ஒரு வகுப்பில் எத்தனை மாணவிகள் இருக்கிறார்களோ, அத்தனை பேருக்கும் ஒவ்வொரு பகுதியாண்டிற்கும் (Term) நூலகப் புத்தகங்கள் வழங்கப்பட்டு அந்தப் பகுதிக்குள் அத்தனை மாணவிகளும் படித்தும் தங்களுக்குள் மாற்றிப் படித்தும் பயன் பெறுகின்றனர். தாங்கள் படித்த புத்தகங்களின் குறிப்பை Library Record என்ற புத்தகத்தில் எழுதுகின்றார்கள். இது தவிர மதிய உணவுக்குப் பின் ஒவ்வொரு மாணவியரும் தனித்தனியே தங்களுக்கு வேண்டிய புத்தகங்களை அவர்களே தேர்ந்தெடுத்து (Individual Library books) படித்து பயன்பெறுகின்றனர். இதற்கு Open Access System எனப் பெயர்.

மாணவியர் அனைவரும் நூலகம் வந்து நிறைய பயன் பெறுகின்றனர். ஒவ்வொரு போட்டிக்கும் மாணவியர் நூல்நிலையப் புத்தகங்களைப் பயன்படுத்தி பரிசுகள் நிறைய பெற்று வந்துள்ளனர். மற்றும் ஆசிரியர்களும் வகுப்பு நேரங்களில் Reference Books எடுத்து மாணவியருக்கு நன்கு விளக்கிக் கூறுகின்றனர். மேலும் கலைக் களஞ்சியங்கள் (Encyclopaedia) மாணவியருக்கு பயன்படுகிறது. 'வீட்டிற்கொரு நூல்நிலையம்' என்னும் பொன்மொழியை மனதிற் கொண்டு கலைமகள் குடும்பத்திலுள்ள ஒவ்வொரு நபரும் நூலகத்தைப் பயன்படுத்தி அறிவைப் பெருக்கி வருகின்றனர். நூலகமானது ஒருவன் மகிழ்ச்சியில் திளைத்த நிலையில் மேலும் மேலும் திளைக்க வழி செய்யவும், துன்பத்தில் மூழ்கிக் கரைகாணாது தத்தளிக்கும் போது, அதனை நீக்கிக் கரையேற்றும் தோணியாகவும் உதவும். எனவே, இளமையிலிருந்தே நூலகம் சென்று படிக்கும் பழக்கம் ஏற்பட வழிசெய்து படிப்பவர் பெருகச் செய்ய எம் கலைமகள் கல்வி நிலையத்தின் நூல் நிலையம் சிறந்த பணி செய்கின்றது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

மேலும் எமது மெட்ரிக் பள்ளியின் நூல் நிலையம் சிறந்த நூல்களைக் கொண்டு சிறந்ததொரு நூல் நிலையமாக விளங்குகின்றது. ஆசிரியைகளுக்கு உதவத் தக்க விலை மதிப்பற்ற World Book Series, Time Life Series போன்ற சிறந்த Reference Books உடையதாக இது விளங்குகின்றது.




சஞ்சயிகா திட்டத்தில் குழந்தைகளின் ஆர்வம்




சிறுசேமிப்புத் திட்டத்தில் முதல் பரிசாக மாருதி வேன் (1994)

இப்பிரார்த்தனையில் முப்பெரும் மதங்களுக்கும் ஏற்ற தர்மங்கள் எடுத்துக்காட்டப் படுகின்றன. தரையின் மீது மாணவிகள் அமர, உயர்ந்த மேடையில் ஆசிரியைகள் அமர, பிரார்த்தனை பயபக்தியுடன் நடக்கிறது. ஆசிரியைகள் இந்து, இஸ்லாம், கிறிஸ்துவ மதங்களின் வேத புத்தகங்களிலுள்ள கருத்துக்களைத் தமிழ்மொழியில் படிக்கிறார்கள். மாணவிகள் அனைவரும் ஒரே குரலில் பாடுவதைப் பார்க்கும் போது கண்ணுக்கும், செவிக்கும் இனிமையாய் உள்ளது. மாலை 4 மணிக்கு பள்ளி முடிகிறது. பள்ளியை ஒட்டி விடுதி உள்ளது. அதிலும் பாலர் வகுப்பிலின்று 11 ஆம் வகுப்பு வரை 400 பேர் இருப்பதற்கேற்ற வசதிகள் உள்ளன. ஓர் அறையில் காலஞ்சென்ற உயர்திரு. மீனாட்சி சுந்தரம் அவர்கள் உபயோகித்த எல்லாப் பொருட்களும் பக்தியுடன் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. 25 வருடங்களாக அவர் காட்டிய வழியில் பள்ளி வீறுநடை போட்டுச் செல்கிறது. பள்ளி வகுப்பு சுத்தப் படுத்துவதிலின்று, மணியடிக்கும் வரை எல்லா வேலைகளையும் மாணவிகளே செய்கிறார்கள். பள்ளியில் ஓர் நேர்மை நிறுவனம் உள்ளது. மிட்டாய் முதல் எல்லாப் பொருட்களும் இங்கே கிடைக்கின்றன. இந்நிறுவனத்தை கண்காணிக்க ஆள் கிடையாது. ஓர் விலைப்பட்டியல் மட்டுமே இருக்கும். இதே போல் மாணவிகளே நடத்தும் சேமிப்பு வங்கியும் இங்குள்ளது. இக்கணக்கில் ஓர் மாணவி 500 ரூபாய் கணக்கில் வைத்து இருப்பதைக் கண்டேன். இந்த மாணவி வருடா வருடம் சேமித்து இப்பெருந்தொகையைச் சேமித்துள்ளார். இரு மாணவியர் இவ்வங்கிச் செயலாளர். வங்கியில் பணம் கட்டுவது, வட்டி கணக்கிடுவது, திரும்பப் பணம் பெறுதல் போன்றவை இவர்களின் அலுவல்களாகும். தமிழ், பூகோளம், புதுக்கணிதம், கணிதம், சரித்திரம், ஆங்கிலம் போன்றவைகளுக்குத் தேவையான பல உபகரணங்கள் செய்யப்பட்டுள்ளன. இவை எல்லா வகுப்புகளுக்கும் பயன்படுகின்றன.

இப்பள்ளியில் கண்ணையும், கருத்தையும் கவரும் அழகிய நூலகம் உள்ளது. இதில் 700 குறிப்பெடுக்க உதவும் புத்தகங்கள் (Reference Books) உள்ளன. மேல் படிப்பு படிக்கும் ஆசிரியைகளுக்கு உதவும் புத்தகங்களும் உள்ளன. இரு ஆண்டுகள் முன்பு ஐ.நா. சர்வதேசப் புத்தக ஆண்டின் போது மாணவிகள் பள்ளி நூலகத்திற்கு புத்தகங்கள் பரிசாக அளித்தனர். இவ்வாறு ஒரு ஆண்டில் 13,000 புத்தகங்கள் சேர்ந்து விட்டன.

மூன்று மாதங்கட் கொருமுறை ஓர் காலாண்டு மலர் வெளியிடுகிறார்கள். மாதா மாதம் பரீட்சை வைத்து தேர்ச்சிக் குறிப்பை பெற்றோர்க்கு அனுப்புகிறார்கள். இதனின்று மாணவிகள் தரத்தைப் பெற்றோர் உணர முடிகிறது.

ஒவ்வொரு மாணவிக்கும் ஆன்ம சோதனை நாட்குறிப்பு அளிக்கப்படுகிறது. அதில் மாணவிகள் அன்று அவர்கள் செய்த செயல்களைக் குறிக்க வேண்டும். இது அவர்களைத் திருத்துவதற்கு வழி செய்கிறது. செல்வி. முத்தையா அவர்கள் அவர்களுடைய ஆசிரியைகளைப் பற்றியும், அவர்களின் உழைப்பைப் பற்றியும், ஒற்றுமையைப் பற்றியும் பெருமையாகப் பேசினார்கள். 'ஆசிரியைகளின் ஒற்றுமையும், தளராத உள்ளமும் இம்முன்னேற்றத்திற்கு வழிகாட்டிகள்' என்றார்.

இங்கு 11 வது வகுப்பு வரை இலவசக் கல்வி அளிக்கப் படுகிறது. சிறிய Zoo ஒன்று உள்ளது. 2000 வருடங்களுக்கு முன் உள்ள ஓர் முதுமக்கள் தாழி கிடைத்துள்ளது. இந்திய மாநிலங்களின் ஆடை அலங்காரத்தை குறிக்கும் மாதிரிகள் வைக்கப்பட்டுள்ளன. எரிமலையின் Model என்னை மிகவும் கவர்ந்தது. உண்மையான எரிமலையைப் போன்றே காட்சியளித்தது. ஒவ்வொரு ஆங்கிலப் பதத்தையும் நன்றாக உச்சரிக்கும் ஆசிரியையின் குரலை ஒலிப்பதிவு செய்து அவ்வுச்சரிப்பை அனைவர்க்கும் கற்றுத் தருகிறார்கள். இது மிக உபயோகமான செயல் என்றோர் ஆசிரியை கூறினார். எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் 13 வருடங்கள் 100% தேர்ச்சி கிட்டியிருக்கிறது. இதைக் கேட்டதும் இப்பள்ளிக்கும் நமது பள்ளிகட்கும் உள்ள வித்தியாசம் என்னை உறுத்திற்று. சூடான காப்பி அருந்திய பின் பள்ளிப் பேருந்திலே புறப்பட்டுச் சென்றோம்.

*வெளியான தினசரி* : 20-7-75 (தருண் பாரத்)

*மொழி* : மராத்தி

உருவங்கள் நீங்கள். கல்வி ஒளியைக் கொடுத்து விட்டு மாய்ந்து போகும் மெழுகுவர்த்திகள் நீங்கள். அதனால்தான் நான் கேட்கின்றேன். ஏ! மெழுகுவர்த்தியே, நீ எங்கள் குழந்தைகளுக்கு ஒளியை கொடுத்துவிட்டு உருகியல்லவா போகின்றாய்.

கவலை வேண்டாம். கலைமகள் விருட்சத்தின் செழுங்கிளைகளே! கிளைகளை வைத்துத்தான் மரத்தின் ஆரோக்கியத்தை அறிய முடியும். உங்களுக்கு ஐயாவின் ஆசீர்வாதமும், அம்மாவின் அன்பும், எங்களின் ஒத்துழைப்பும் என்றுமுண்டு. அதுவே உங்களுக்கு வேழத்தின் பலம். வாழிய உங்கள் அறப்பணி, வாழிய உங்கள் புகழ்!

### கலைமகள் விருட்சத்தின் 'கனிகள்' மாணவியச் செல்வங்கள் :

நீங்கள் கலைமகள் விருட்சத்தில் கனிந்த கனிகள் ஆவீர்! இம்மரத்தின் பெருமையை என்றும் குன்றச் செய்து விடாதீர்! பயிர் வளர சாம்பல், மணி, இழைச் சத்து என மூன்றும் வேண்டும். அதே மாதிரி உங்கள் வாழ்க்கைப் பயிர் செழித்து முழுப்பயன் கிடைக்க கடமை, கண்ணியம், கட்டுப்பாடு, என்ற உரத்தை இட்டு வாழுங்கள், வளருங்கள்! கரையில்லாத குளம் அழிந்து விடும். அதனை உணர்ந்து எழுத்தறிவிக்கும் இறைவனாம் ஆசிரியப் பெருமக்களின் கட்டுப்பாடு என்னும் கரைக்கு உட்பட்டு உங்களை நீங்களே காத்துக் கொள்ளுங்கள்! கற்றுக் கொள்ளுங்கள்! நற்பண்புகளை. குத்து விளக்காக, குலமகளாக என்றும் திருமகளாக வாழுங்கள் வளமுடன்!

நெஞ்சில் ஓர் ஆலயமாக வீற்றிருக்கும் இந்தக் கலைமகள் கோயில் கர்பக் கிரகத்தில் வைத்து வணங்கத்தக்க ஐயா, அம்மாவின் புகழும், எதுகையும் மோனையும் தமிழுக்கு அழகு தந்ததைப் போல அவர்கள் இப்பள்ளிக்கு ஆற்றிய அருந்தொண்டும் புகழும் கல்லும், காவிரியும், சந்திரனும், சூரியனும் உள்ள வரைக்கும் என் தமிழ் போல் என்றும் நிலைத்து நிற்க வேண்டும். வாழிய தமிழ்! வாழிய கலைமகள்!

# Kalaimagal - Today - a wonder

**Mrs. Shanthi Dinakar** M.A., B.Ed.,
P.G. Asst.

Except the Lord build the house, they labour in vain that build it, except the Lord keep the city the watchman waketh but in vain.

- The Bible (Ps. 27, v-1)

Glowing in the golden rays of the rising Sun, decked with a motley range of flowers, studded with beauitful palms and the gracefully Swaying Asoka trees, stands the stately KALAIMAGAL KALVI NILAYAM, a pride to the town, a glory to the state, a halo to the Nation and a boon to the women folk of our town.

One really wonders how an immense student population of nearly 6000 could so comfortably be accomodated within the incredibly small space available. Yes, dear reader, Kalaimagal is a bonanza of breathtaking wonders. The centum results secured consecutively with unimaginable strength in all the three public examinations in Matric, S.S.L.C. and Plus two is a tell tale wonder, for we with Gods' Almighty help produce the fabulous results not with the elite, the cream of society but with a heterogenous grouping of students with varied mental abilities.

Conceived in solemn prayers, nurtured with sufficient dedication, this institution was wrought by the unseen hands of God Almighty and bequeathed to our founder, Late Shri Meenakshi Sundaram Mudaliar, Late Miss Muthiah with her missionary zeal and assiduous endeavours turned out to be a real asset to the institution. Having run the race diligently, Iyyah handed over the mission to Miss. Muthiah, affectionately known as 'Amma', who after an era of legendary accomplishments handed

A mighty tree that rivalled the sky,
Its magnificient presence caught the eye.
Like a sleepless sentinel it inexorably stood.
Protecting around all that it could.

Be it a shrub or a shining flower
It guarded everything with an unseen power
Time passed it by in reverent stride
As it stood in majesty, glory and pride.

I softy asked the name of this tree
As i wondered what it could possibly be
In hushed tones the reply came
"It's Kalaimagal. Yes, that's its name."

Some saw in it a monument, some a Tower;
Many saw a teacher, a few a flower -
But the Kalaimagal, I could joyfully see
Was a noble life - giving stately tree.

# Treading on the imprints

(Mrs. M. Sadhanandhi, M.A., B.Ed)
Prep. Teacher - Old Student

Kalaimagal is a landmark in the history of two Es, Erode and Education. When we think of Agra, Taj Mahal comes before our eyes. In the same way when we think of Erode, Kalaimagal comes to our mind afresh..

As an old student, a staff at present and a mother of two students of Kalaimagal, I feel proud to think of Kalaimagal, its birth, growth and the depth of my teachers' love who are the pillars of our school. They dedicate their lives for the very existence of our school. I am lucky for I was taught by our beloved Iyya, Amma, Correspondent, Mrs. Mangalavathy and our Headmistress Mrs. Lily Pushpam Mary. Many of my teachers are still here of whom I can be proud of. They are my family. I have been living with them since my third year. I have spent maxmium time with them. Amma is the cause for everything that I enjoy now.

Iyya dreamt of a school which should equip girls with the weapons of modern virtues. But it was Amma who gave life to his dreams. Amma is more than a Nightingale or Mother Teresa to me because I have not seen them but read about them only in letters. But Amma lived before us and dedicated her life for the cause of Kalaimagal.

Amma is followed by our present Correspondent who is treading on the imprints of Iyya and Amma. It is indeed glorious to see the Golden Jubilee of my Almamater and I wish many more achievments to be carved in letters of Diamond and platinum.

I pray to God to give our teachers, students, staff and well wishers of our school, long life, strength and courage to serve the purposes of Iyya and Amma.

Longlive Kalaimagal!

பெற்றோர் ஆசிரியர் சங்கம் பாராட்டு விழா ஒன்று எடுத்து, திருமதி. S. மங்களவதி அவர்களைப் பாராட்டியது.

1992-93 ஆம் ஆண்டில் மாநில நல்லாசிரியை விருது பெற்ற துவக்கப் பள்ளித் தலைமை ஆசிரியை செல்வி. எலிசபெத் அவர்களை, கலைமகள் பெற்றோர் ஆசிரியர் சங்கம் பாராட்டியது. 1993-94 ஆம் ஆண்டில் நடைபெற்ற 10ம் வகுப்பு மெட்ரிக்குலேஷன் பள்ளியிறுதித் தேர்வில் மாநில அளவில் முதல் மதிப்பெண் பெற்ற மாணவி செல்வி ரம்யா ராமராஜைப் பெற்றோர் ஆசிரியர் சங்கம் பரிசளித்துப் பாராட்டியது.

ஒவ்வொரு வருடமும் 10 ஆம், 12 ஆம் பள்ளியிறுதித் தேர்வுகளில் நூற்றுக்கு நூறு தேர்ச்சி பெற்றுத் தந்த ஆசிரியைகளுக்குப் பெற்றோர் ஆசிரியர் சங்க நிதியிலிருந்து, ஒவ்வொரு பாட ஆசிரியருக்கும் அரசு ஆணைப்படி ரூ. 100/- கொடுப்பது என்று சங்க உறுப்பினர்கள் ஏகமனதாக முடிவு செய்து ஒவ்வொரு வருடமும் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது. 10 ஆம், 12 ஆம் வகுப்புகளில் ஒவ்வொரு பாடத்திலும் அதிகமான மதிப்பெண்கள் பெற்ற முதல் மூன்று மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப் பட்டு வருகிறது. இதற்காகும் செலவுகள் பெற்றோர் ஆசிரியர் சங்க நிதியிலிருந்து எடுத்து செலவு செய்யப் படுகிறது.

1994-95 ஆம் ஆண்டிலிருந்து அரசு ஆணைப்படி, பள்ளிக்கு அதிகப் படியாகத் தேவைப்படும் 3 ஆசிரியைகளுக்குப் பெற்றோர் ஆசிரியர் சங்க நிதியிலிருந்து மாதச் சம்பளம் வழங்கப்பட்டு வருகிறது.

மேற்கண்ட நடவடிக்கைகள் அனைத்தும் கலைமகள் பெற்றோர் ஆசிரியர் சங்கத் தலைவர், உபதலைவர், செயலர், பொருளாளர், இணைச் செயலர்கள் இருவர், ஒன்பது உறுப்பினர்கள் மூலம் நடை பெற்று வருகிறது.

சமுதாய ஈடுபாடு கல்வித் துறைக்கு மிகவும் அவசியம். இந்த ஈடுபாட்டால் முழுமையான மும்முனைக் கல்வியை அனைத்து மாணவியருக்கும் தர முடியும். மாணவியர்களின் முழுத் திறமையையும் வளர்க்கப் பெற்றோர்கள் ஆசிரியர்களுடன் ஒத்துழைத்து வருகின்றனர்.

## பிற மாநிலப் பத்திரிக்கையில் 'கலைமகள்'

*(மகாராஷ்டிரத்திலிருந்து உயர்திரு. மனோஹர் ஜோஷி M.A., B.Ed., ஈரோட்டிற்கு வந்திருந்தபோது கலைமகள் கல்வி நிலையத்திற்கு விஜயம் செய்து செல்வி. முத்தையாவுடன், அளவளாவிப் பின்பு எழுதிய கட்டுரையின் மொழி பெயர்ப்பு இக்கட்டுரை. 'Tarun Bharat' என்ற மராத்தி தினசரிப் பத்திரிகையில் ஜூலை 1975 இல் பிரசுரிக்கப்பட்டது)*

### சரஸ்வதி வித்யா மந்திர் [கலைமகள் கல்வி நிலையம்]

ஈரோட்டினுடைய ஜனத்தொகை 4,08,000. இவ்வளவு ஜனத்தொகைக்கும் 8 உயர்நிலைப் பள்ளிகளே உள்ளன. 8 பள்ளிகளிலும் நவீன வசதிகளுடன் கல்வி கற்பிக்கப் படுகிறது.

இங்குள்ள ஓர் சிறந்த மாதிரிப் பள்ளிதான் கலைமகள் கல்வி நிலையம். 27 வருடங்களுக்கு முன்பு, காலஞ் சென்ற ஸ்ரீ எஸ். மீனாட்சி சுந்தரம் அவர்கள் 77 குழந்தைகளுடன் கலைமகள் கல்வி நிலையமென்ற ஸ்தாபனத்தை நிறுவினார். ஆனால் இன்று இப்பள்ளி தமிழ்நாட்டிற்கே ஓர் சிறந்த எடுத்துக்காட்டான, பெண்கள் கல்வி நிலையமாகத் திகழ்கிறது. இன்று இப்பள்ளியில் குழந்தைகள் வகுப்பினின்று உயர் நிலைப் பள்ளி வகுப்புகள் வரை, சுமார் 4000க்கும் மேற்பட்ட மாணவ மாணவிகள் கல்விச் செல்வத்தைப் பெறுகிறார்கள்.

இப்பள்ளியின் நிர்வாகியும், தலைமை ஆசிரியையுமான செல்வி முத்தையா அவர்களுடன் அளவளாவிய பொழுது இதன் வளர்ச்சி குறித்து ஆணித்தரமாக விளக்கினார்கள். இப்பள்ளி அடர்ந்த சோலைக்கிடையே மணம் வீசும் பூக்களின் நறுமணத்தால் நிறைந்துள்ளது.

மாணாக்கியர் Maroon நிறப்பாவாடையும், தாவணியும் அணிந்து, அழகுடன் விளங்குகிறார்கள். இங்கு திங்கட்கிழமை காலையில் 9 மணிக்கு சர்வோதயப் பிரார்த்தனை தொடங்குகிறது. 20 நிமிடம் நடக்கும்

# THE MAGIC OF LOVE

J. SUSANNA SHEELA
XII 'A'

A prayer uttered in the stilness of the night,
Can break shackles and pass through gates of might,
A tender touch of Love for the bruised heart,
Can undo the wrongs of a doleful past,
An eloquent silence amidst ceaseless contention,
Softens at once the fiercest disposition,
An art of Gratitude in due season expressed,
Promotes Goodwill unleashing wrath suppressed,
A kind word could easily kindred win
Of the fiery foe amidst awesome din,
Where pity abounds, poverty vanishes
And with it too all rueful skirmishes
Making angelic saints of violent barbaric beasts
Whispepring around Love, Hope and Peace
"Lay aside guns and ballistic missiles
For dynamic power within you lies",
Long suffering Love leaves no loathsome trails
And winsome acts of kindness never fail
To spread the aroma of Heavenly Grace,
Binding all under one banner 'The Human Race'.

# A TEACHER - WHO IS SHE?

By JOYCE BELINDA (II B.E.)
old Student

Stands there she with chalk in hand
Cause no doubt its her magic wand
Devotion shining in her eyes
Endeavouring to remove all vice
No poems written, No ballads made
Still no monument laid.
The unsung heroine of our Nation
Fighting ignorance and superstition
She had helped to sow

Cent percent sincere is her vow
Stands she engaged in an unremunerative occupation,
Students must stand in veneration.
The interest of her pupils being foremost in her heart
Plays best her true part.
Year ling for no material gain or worldly honour
'Attacks' though received form every corner
Alters not her spirit still
Goes on her path with an untiring will.
Students reciprocation alone her desire
That's all her bliss
Can you guess who she is?
She is none but your 'Teacher Dear'.

# IMPACT OF COMPUTERS IN THE FIELD OF EDUCATION (SCHOOL LEVEL)

**Mrs. R. Harini,** B.A., D.A.C.P., C.S.D., C.H.S.M.,
COMPUTER SCIENCE ASSISTANT

Before starting the article, I present it as my humble homage to our most respepcted founder, Ayyah and our beloved Amma, Who was with us in the initial stage of this department but present with us in an abstract manner like the guardian angel.

Computer no doubt is the hero of this era. It plays a dominant role in every walk of life. No doubt it is playing its important role in the field of education also. Computer education is given right from the primary level to the collegiate level. I would like to present my views regarding the utilisation of computers as an educational aid for learning/teaching purposes and at the same time the learning/teaching of computer as a subject itself

## PRIMARY LEVEL:

Here, children of age upto ten are studying. We cannot expect logical or analytical thinking from them which is an essential fundamental aptitude and principle in learning this science. So, instead of teaching them about hardware details or programming (of course in simple level even), many educational softwares in accordance with their syllabus can be taught through practicals. They will be really benefitted in two ways. That is, in one way they get well acquainted with the computer operations and at the same time, they learn even the subjects (maths, science, social science, language etc) clearly which also will be a sort of revision to them. Every topic can have a feed back in the objective questions for which the students when answering are examined then and there by the computer itself and thus know their level in the respective subject.

If children are taught with the computer devices, parts etc like disk, modems, and all

# அன்றும்! இன்றும்!! என்றும்!!!



**திருமதி. விக்டோரியா அன்புடையான்**
*ஓய்வுபெற்ற ஆசிரியை*

ஈரோட்டுக்கு அருகில் கஸ்தூரிபா கிராமம் பெண்கள் வித்தியாலயம் ஒன்று உள்ளது. அதில் சுமார் 36 ஆண்டுகளுக்கு முன்னர் யான் சேவிகாஸ்ரமத்தில் ஆசிரியையாகப் பணி புரிந்தேன். மாலை நடக்கப் போகும் ஒரு சிறப்பு நிகழ்ச்சிக்கு, இருமொழி சொற் கொண்டல் திரு. மீனாட்சி சுந்தர முதலியார் B.A., L.T., அவர்கள் (கலைமகள் கல்வி நிலைய ஸ்தாபகர், ஐயா) தலைமை தாங்கினார். அன்னாரை வரவேற்க வித்தியாலய வளாகமே சொல்லொணா மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி இருந்தது. கம்பீரத் தோற்றமுடைய ஐயாவும், செல்வி. முத்தையாவும், குழந்தைப் பள்ளி ஆசிரியர் திருமதி. சரோஜா அவர்களும், குறித்த நேரம் வித்தியாலயம் வந்தடைந்தனர். ஆசிரியர் பயிற்சி பெறும் பெண்களுக்கு ஐயா ஆற்றிய சொற்பொழிவினைக் கேட்ட யான், கல்வித் தொண்டில் அன்னாருக்கு இருந்த ஈடுபாட்டினை நன்கு அறியலானேன். அது மட்டுமல்ல; அறிவு சான்ற இப்பெரியோரின் பள்ளியில் பணிபுரிந்தால் எத்துணை பாக்கியம் என அன்று சிந்திக்கலானேன். எனது சிந்தனை வீண் போகவில்லை. இறை மகன் இயேசுவின் அருளால் 1961 ஆம் ஆண்டு, கலைமகளில் இடைநிலை ஆசிரியையாகப் பணிபுரியும் பேற்றினைப் பெற்றேன்.

கலைமகள் கல்வி நிலைய வளாகத்தின் உள்ளே யான் சென்ற முதல் நாள்! அன்று காலை நேரம் - ஸ்தாபகர் ஐயா அவர்கள் நெடிய துடைப்பத்தைக் கொண்டு (broom-stick) நடைபாதைகளைத் துப்புரவு செய்யும் செயலைக் கண்டு வியப்படைந்தேன். உழைப்பின் மேன்மையைக் குறித்துப் (Dignity of Labour) பிறருக்குப் போதனை செய்பவராக மாத்திரம் ஐயா இல்லாது, சாதனையாளராகவும் திகழ்ந்ததை அன்று நேரில் கண்டேன். மேலும் தோட்ட வேலை, கட்டட வேலை ஆகியவற்றில் தான் ஈடுபடுவதுடன், விடுதி ஆசிரியர்கள், மாணவ மாணாக்கியர்கள் ஆகிய அனைவரையும் ஈடுபடச் செய்வார்.

ஐயா அவர்கள் 'ஆசிரியர்கள் ஊதியம் வாங்குவதை மனதில் கொள்ளாது சேவை மனப்பான்மையுடன் புனிதமான இத்தொழிலைச் செய்ய வேண்டும்' எனவும், 'அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட குழந்தைகள் உயிருள்ள ஆன்மாக்கள்; அவர்களது உடல் - உள்ள ஆன்மீக வளர்ச்சியில் அக்கறை கொண்டு போதித்து, நாட்டின் ஒப்பற்ற பிரஜைகளாக ஆக்குவதே ஒரு நல்லாசிரியரின் அறப்பணி' என்றும் ஆசிரியர்களாகிய எங்களிடம் அடிக்கடி வலியுறுத்திக் கூறுவார். மேலும் Work first, Money next - You are God's Children என்று உழைப்பின் மேன்மையையும் கூறி, 'Practice, More Practice, Still more practice - No pain, No gain' என்பதனையும் அடிக்கடி எங்களிடம் சொல்லி வேலை செய்வதினால் ஏற்படும் ஆன்ம திருப்தியை எங்களிடையே உணரச் செய்வார்.

ஐயாவிற்கு சமயப்பற்றும் தேசப்பற்றும் இரு கண்கள் போன்றவை. சமயக் கருத்துக்களை எளிய முறையில் விளக்குவதில் அவருக்கு நிகர் அவர்தான்.

'கண்காணி யில்லென்று கள்ளம்பல செய்வார்
கண்காணி யில்லா விடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண்டார் களவொழிந் தாரே.'

என்னும் திருமந்திரத்தில் கண்டுள்ள வரிகளைக் கூறி, எங்களுக்கு உள்ளத் தூய்மையை மனத்தில் இருத்தி அனைத்துச் செயல்களிலும் நாங்கள் ஈடுபட வேண்டுமென்பதை வலியுறுத்துவார்.



குத்து விளக்கு வைபவத்தில் சர்வோதயப் பிரார்த்தனை



ஒளி ஏற்ற ஒளி பெறுக




குத்து விளக்கு ஏற்றும் எமது அன்னையர்




Kalaimagal Meenakshi Sundaram
Archaeological Learning and
Research Centre



முதுமக்கள் தாழிகள்

### உலோகப் பொருள்கள் :

பண்டைக் கால உலோகப் பொருள்களில், பசுவின் வாயிலிருந்து கொடிபோல் படரும் அழகிய பன்னீர் தெளிக்கும் பொருள் கலை நுணுக்கத்துடன் அமைந்துள்ளது காணற்கரியது. நின்ற யானை மீது வைக்கப்பட்டுள்ள கஜவிளக்கு, காமாட்சி, அலங்கார விளக்கு, பாவை விளக்கு, ஊதுபத்திச் சிமிழ், ஒட்டியாணம், தண்டை, சிலம்பு, தருமபுரிவாள் ஆகியவை காணப்படுகின்றன.

### மரச் சிற்பங்கள் :

பத்திரகாளி, வீணாதர தட்சிணா மூர்த்தி போன்ற அரிய மரச் சிற்பங்கள் இருக்கின்றன.

### ஓலைச் சுவடி :

கம்பராமாயணம், திருக்குறள், கிழக்கிந்திய கம்பெனி, கிராம அடங்கல்கள், சோதிட ஏடு, எண் சுவடி, கணிதம், தனிப்பாடல், தெலுங்கு ஏடு, கிரந்த ஏடு போன்ற பல அரிய சுவடிகள் உள்ளன. 1994 ஆம் ஆண்டு சென்னை திருவான்மியூரில் நடத்தப்பட்ட ஓலைச்சுவடி பயிற்சியில் எமது ஆசிரியை செல்வி ந. பாலசரசுவதி ஓலைச் சுவடிக்கான பயிற்சி பெற்று வந்தார். அந்நிறுவனத்தைச் சார்ந்த செல்வி விருதசாரணி, அவர்கள் எமது பள்ளிக்கு வருகை தந்து இக்கலைக் கூடத்தில் உள்ள ஓலைச் சுவடிகளைப் புதுப்பித்து அவற்றை ஆய்ந்து தொகுத்தளித்தார். எம்பள்ளிக்கு அப்பணி பேருதவியாக இருந்தது.

### தொல் பழங்காலப் பொருட்கள் :

பழங்கால ஆயுதங்கள், புதுக்கற்கால ஆயுதங்கள், மட்பாண்டங்கள், இரும்பு ஆயுதங்கள் நொய்யல், தர்மபுரி ஆகிய பல்வேறு இடங்களில் கிடைத்த மணிகள், நூண்துளைக் கருவிகள், தக்களி, சிலம்பு, வாள் தண்டை ஆகிய பொருட்கள் கலைக் கூடத்தில் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. 2000 ஆண்டுகட்கு முற்பட்ட ரோமானிய கடவுளின் தலை கிடைத்துள்ளது.

### முதுமக்கள் தாழி :

2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட முதுமக்கள் தாழிகள் உள்ளன. சங்க இலக்கியங்களில் பெரிதும் போற்றப்படும் தாழிகளில் ஒன்று உள்ளது. இது அளவில் பெரியது. ஆண், பெண்ணுமாக இரு எலும்புக் கூடுகள் மட்பாண்டங்கள் பல இதனுள் இருந்தன.

### தபால் தலை மற்றும் நாணயங்கள் சேகரித்தல் :

கிழக்கிந்தியக் கம்பெனி நாணயங்கள், மதுரை நாயக்கர் கால நாணயங்கள் கொங்கு நாட்டு நாணயங்கள் Asian games coins 1982 ஆகியவை கலைக் கூடத்தில் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. ஆண்டுதோறும் தபால் தலை மற்றும் நாணயங்கள் சேகரித்தல் போட்டிகளில் எம்பள்ளி மாணவியர் பங்கேற்று பல்வேறு பரிசுகளையும் பெற்று வருகின்றனர். நேரு தபால்தலை மன்றம் ஒன்று எங்கள் பள்ளியில் தொடங்கப்பட்டு ஒவ்வொரு வாரமும் செயலாற்றி வருகிறது.

### கல்வெட்டுக் குழு :

தொல்பொருள் ஆய்வில் மாணவியருக்கு ஆர்வம் உண்டாக எம்பள்ளியில் கல்வெட்டுக் குழு ஒன்று செயல்படுகிறது. நூற்றுக்கு மேற்பட்ட மாணவியர் ஆர்வத்துடன் பயின்று பயிற்சி பெறுகின்றனர். ஈரோடு அரசு அருங்காட்சியகத்துடன் இணைந்து எங்கள் கல்வெட்டுக்குழு ஆண்டு தோறும் மரபுச் சுற்றுலா சென்று வருகிறது. இதன் சார்பாக நொய்யல், கொடுமணல், பவானி, அரச்சலூர், விஜய மங்கலம், சங்ககிரி கோட்டை, காளிங்கராயன் அணை ஆகியவற்றிற்கு மாணவியர் சென்று வந்துள்ளனர்.

### ஆய்வுக் கூடம் பற்றிய பல்வேறு பாராட்டுக்கள் :

மதுரை 5 ஆம் உலகத்தமிழ் மாநாட்டு பொருட்காட்சியில் கலைமகள் ஆய்வுக் கூடத்தின் சார்பாக வைக்கப்பட்ட நொய்யல் கல்மணிகள் பலராலும் பாராட்டப் பெற்றன. முன்னாள் முதல்வர் திரு. எம்.ஜி. ராமச்சந்திரன், அருட்செல்வர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் ஆகியோரின் பாராட்டுக்களையும், வெளிநாட்டு அறிஞர் தம் பாராட்டுக்களையும் பெற்றுப் பெருமையுடன் திகழ்கிறது எமது ஆய்வுக் கூடம்.

### முடிவுரை :

மாணவப் பருவத்தில், இளமையில் நம் கலைப் பொருட்களையும், வரலாற்றையும், பண்டைப் பெருமைகளையும் அறிவதற்குத் தக்கதோர் வழிகாட்டியாக, கலை உணர்வு ஊட்டும் ஓர் அமுத சுரபியாக, காரிருளில் ஒளி விளக்காக, பழம் பண்பாட்டின் விடிவெள்ளியாகத் திகழும் இக்கலைக் கூடம் பாரத அளவில் மட்டுமின்றி பாரினிலும் தனித்ததோர் இடம் பெறும் என்பது வெள்ளிடை மலை!

# அறிவியல் கண்காட்சிகள்

திருமதி. V. பத்மினி, M.A., M.Phil.,
பட்டதாரி ஆசிரியை

இந்திய மாணவர்களிடையே மறைந்து கிடக்கும் இன்னும் பல சர். சி. வி. இராமன், திரு. இராமானுஜம், திரு. சந்திரசேகர் போன்றவர்களை வெளிக் கொணரும் முயற்சியில் பாரத மனித வளமேம்பாட்டுத் துறையும் தேசியக் கல்வி ஆராய்ச்சி மற்றும் பயிற்சி நிறுவனமும் இணைந்து மாநில, தென் பிராந்திய, தேசிய அளவிலான கண்காட்சிகளை நடத்துகின்றனர். இதுவரை நடைபெற்றுள்ள மாநில அறிவியல் கண்காட்சிகள் இருபத்தியொன்றிலும் எங்கள் பள்ளி பங்கு பெற்றுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் தேர்வு செய்யப்பட்ட பல காட்சிப் பொருட்களுடன் ஆசிரியைகளும் மாணவிகளும் சென்னை, திருச்சி, காஞ்சிபுரம், சேலம், மதுரை, கோவை, வேலூர் ஆகிய இடங்களில் நடைபெற்ற கண்காட்சிகளில் பங்கேற்றனர். கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், மின்னணுவியல், கணிப்பியல் என்ற பல துறைகளிலும் காட்சிப் பொருட்களை அமைத்து பரிசுகள் பல பெற்று தமிழ் நாட்டில் முதலிடத்தை வகித்து வந்துள்ளோம்.

மாநிலத்தில் வெற்றி பெறுவதால் தென் பிராந்திய அறிவியல் கண்காட்சியில் பங்குபெறும் தகுதியையும் ஆண்டு தோறும் பெற்று வந்திருக்கின்றோம். இதில் வெற்றி பெறும் மாணவிகளுக்கும் பள்ளிக்கும் பரிசுப் புத்தகங்களும், ஆசிரியைக்கு நூல்களும் ஊக்கத் தொகையும் வழங்குகின்றனர். இவ்வகையில் சிறந்த காட்சிப் பொருளைச் செய்த ஆசிரியைக்கான பரிசினை எம் பள்ளி கணித ஆசிரியை திருமதி. ஜெபசீலி ரேச்சல் B.Sc., M.Ed., அவர்கள் 1990-ல் மூன்றாம் பரிசினையும் 1992-ல் இரண்டாம் பரிசினையும் 1994ல் முதல் பரிசினையும் பெற்றுள்ளார் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

மாநில அளவில் வெற்றி பெறும் பள்ளிகள் மட்டுமே தேசிய அறிவியல் கண்காட்சியில் பங்கு பெற இயலும். உதயப்பூர், ஜபல்பூர், காஷ்மீர், ஹைதராபாத், சென்னை முதலிய இடங்களில் நடைபெற்ற பல தேசிய அறிவியல் கண்காட்சிகளில் எங்கள் பள்ளி ஆசிரியைகளும் மாணவிகளும் கலந்து கொண்டுள்ளனர்.

மாவட்ட அளவில் நடைபெறும் அறிவியல் கருத்தரங்கில் எங்கள் மாணவியர் ஆண்டு தோறும் வெற்றி பெற்று மாநில அளவிலான கருத்தரங்கில் பங்கேற்பர். அதில் வெற்றி பெற்றுத் தேசிய அளவிலும் கலந்து கொண்டு உள்ளனர். செல்வி. சுஷ்னா ஷீலா 1992ல் டில்லியில் நடைபெற்ற தேசிய அளவிலான கருத்தரங்கில் பங்கு பெற்று, பல நூல்களைப் பரிசாகப் பெற்றாள். எங்களின் இந்த வெற்றிகள் யாவும் இறையருளினால் எங்கள் தாளாளரின் வழி நடத்துதலில் ஆசிரியைகளும் மாணவிகளும் இணைந்து செயல்பட்டமைக்குக் கிடைத்த ஊக்கப் பரிசுகளாகும்.



## சத்திய சோதனைத் தேர்வும் பயிற்சி முகாமும் :

காந்தி நிறுவனத்தாரால் நடத்தப்படும் சத்திய சோதனைத் தேர்வில் மாணவியர் ஒவ்வொரு ஆண்டும் கலந்து கொள்கின்றனர். அதிக மாணவியர் கலந்து கொண்டமைக்காக பள்ளித் தாளாளராக விளங்கிய எங்கள் அன்னை செல்வி. முத்தையா அவர்களுக்கு நமது பாரதப் பிரதமர் அன்னை இந்திரா காந்தியும் பரிசினை வழங்கிப் பாராட்டியுள்ளார். விடுமுறைக் காலங்களில் காந்தீய நிறுவனத் தொண்டர்கள் மாணவியர்களுக்கு பயிற்சி முகாமும் நடத்துகின்றனர்.

## நேர்மை நிறுவனம் :

'கண்காணி இல்லை என்று கள்ளம் பல செய்வார், காணுங்கால் கண்காணி இல்லா இடமில்லை'. கண்காணியும் கடைக்காரரும் இல்லாத கடை ஒன்றுள்ளது. அதுதான் நேர்மை நிறுவனம். இதில் மாணவியர் பொருட்களை எடுத்துக் கொண்டு விலைப்பட்டியலில் குறித்த காசினை உண்டியலில் போடுகின்றனர்.

## உடையும் எளிமையும் :

விடுதியில் சைவத்தைத் தவிர என்றுமே அசைவ உணவு தயாரிப்பதில்லை. தேநீர் கிடையாது. பசும் பாலே மாணவியர்களுக்கு நல்குகின்றனர். மாணவிகள் தங்க அணிகள் அணிந்து வரக் கூடாது. ஆடையும் தமிழ்ப் பண்பாட்டின் படியே இருத்தல் வேண்டும்.

## விழாக்களும் குத்து விளக்கு வைபவமும் :

காந்திஜி மகாத்மா ஆவதற்கு உறுதுணையாக விளங்கியவர் கஸ்தூரிபாய். அவரது பிறந்த நாள் விழா அன்னையர் தினமாக பிப்ரவரி 22 ஆம் நாள் கொண்டாடப்படுகிறது. ஒவ்வோர் ஆண்டும் தீபாவளியும், கிறிஸ்துமஸ் விழாவும் ஆசிரியர்களால் சாதி சமய வேறுபாடு இன்றி கொண்டாடப் படுகிறது.

'ஒளி பரப்ப ஒளி பெற்றாய்' என்பதற்கிணங்க பள்ளி இறுதி நாளன்று பள்ளி இறுதி வகுப்பு மாணவியர்களுக்குப் பள்ளித் தாளாளர் சர்வோதயப் பிரார்த்தனை நடத்தி அவரது கையிலுள்ள தீபத்திலிருந்து ஒளி பெற்றுச் செல்லுமாறு குத்து விளக்கு நல்கி ஆசியும் நல்குகிறார்.

தாழ்வுற்று வறுமை மிஞ்சி, விடுதலை தறிகெட்டு பாழ்பட்டு நின்ற பாரதத்தை உய்விக்க வந்த அண்ணலின் குறிக்கோளைப் பின்பற்றும் பள்ளியாக கலைமகள் இருத்தலின் இப்பள்ளி ஒரு காந்தீயச் சோலை என்பதில் ஐயமில்லை. இச்சோலை என்றும் காந்தீய மலர்பூக்கும் எழில் மிகு அமைதிப் பூங்காவாக விளங்க வாழ்த்துகிறேன். பொன்விழா காணும் இப்பள்ளி பல நூற்றாண்டு விழாக்களைக் காணும் பள்ளியாக, என்றும் வரலாற்றில் இடம் பெறும் பள்ளியாக வாழ்க, வளர்க.

---

## From Our Visitors' Book...

I was immensily inspired to meet the people who work for the school. It appeared that the school was more than a piece of work. It was a home. Such involvement and commitment to work and such kindness is hard to find. It was altruism at its best. I have learnt a lot and was touched by the affection of the school staff.

I do hope that this model of a school is a source of ideas and inspiration to other schools outside Tamilnadu as well.

I hope to come back here again.

With best wishes.

Nina Nagpel,
Office of Technology,
Development & Enterprise,
USAID/New Delhi - 2.
(American Embassy)
25.4.89

cash awards of Rs. 500/- and Rs. 400/- each. A state level Drawing competition was conducted by T.T.D.C. and Pulse of India. U.S. Vijayasamundeswari XII 'F' won III Prize. 'Sadhbhavana' conducted an Essay competition in the state level. Susanna Sheela - XII 'A' came First and was selected to participate in the National level in Delhi. Nehru Yuva Kendra conducted a Tamil Oratorical Competition S. Vidhyapriya XI 'A' took part in it and got II prize. R. Ramya Ramaraj XII 'A' took part in the English oratorial competition and was selected First in State level. She was further selected to take part in the National Level at Bhopal and got the IV place - a splendid achievement indeed, which we should be proud of!

A competition 'Child of the Year' was conducted by Centre Stage Events P. Ltd. in Bangalore. 40 Students took part and 8 of them were selected and our Ramya was one among them 'Most Promising Academic Performer' title and Rs.10,000/- were given to her. Indeed a really gifted child!

Pollution Control Board conducted Oratorical competition at Dt. level and Regional level. N. Ambujavalli XI 'A' got II prize in both the levels. The achievements penned so far are only the 'High-lights' of some of the competitions. There are many more that have not been put down in black and white.

In whatever competitions the children took part they did their best. Teachers put their heart and soul in helping them. Above all there are two 'Guardian Angles' 'Iyyah' and 'Amma' whose 'Blessings' and 'Prayers' come down on the 'Taught' and the 'Teachers' to achieve such merits. With God's Grace and our perseverence no doubt we'll be getting many more prizes in the years to come.

---

**From Our Visitors' Book...**

Date 28th July 1995.

Name and Address:
S. Sai Ram,
Ph.D., Research Student,
Department of Archaeology,
University of Madras.

Sai Nivas,
102, Valluvar Nagar,
Dharmapuri - 636 705.

The Archaeological Museum in this school is one of the 'Best' of its kind in India. The antiquities in this museum are fantastic.

"Any research on South Indian History and Archaeology willl not be completed without visiting this Museum.

Archaeologists all over the world owe very much to this school and in preserving these wonderful artifacts and cultural equipments Kalaimagal School stands high as a 'Role Model' school for other schools to emulate.

S. Sai Raman.

# சஞ்சாயிகா திட்டத்தில் கலைமகளின் சாதனை

**செல்வி. ஜெயந்தி**

1971 ஆம் ஆண்டு நவம்பர் பதினைந்தாம் நாள் பள்ளிச் சிறார்களுக்கென அமைக்கப்பட்ட சிறுசேமிப்புத் திட்டமான 'சஞ்சாயிகா' திட்டம், எமதருமை ஐயா, உயர்திரு. மீனாட்சி சுந்தரனார் தலைமையில் சிறுசேமிப்புத் திட்ட அதிகாரி திரு. ஜெயராஜ் அவர்களால் எமது பள்ளியில் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

எமது பள்ளியிலுள்ள அனைத்து மாணாக்கியரும் சிறு சேமிப்புத் திட்டத்தில் பணம் சேமிப்பதைப் பாராட்டும் வகையில் தேசிய சிறுசேமிப்பு அதிகாரி திரு. கணேசன் அவர்களால் ஒரு விழா 29.1.75 அன்று பள்ளியில் ஒழுங்கு செய்யப்பட்டது. விழாவிற்குத் தமிழகத்தின் தொழில் துறை நல அமைச்சர் **மாண்புமிகு. க. இராசராம்** அவர்கள் வருகை தந்து சிறப்பித்தார். எமது பள்ளி பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளில் சிறு சேமிப்பில் சிறந்து விளங்குவதால் 'ஜயந்தி சஞ்சாயிக்கா' என அறிவிக்கப்பட்டது. தேசிய சிறுசேமிப்பு இலாகாவினால் அளிக்கப்பட்ட சுழற்கேடயத்தை எமது பள்ளிக்கு மாண்புமிகு அமைச்சர் அவர்கள் வழங்கினார். ஈரோடு அரிமா சங்கத்தினர் பள்ளியைப் பாராட்டும் வகையில் மற்றொரு கேடயத்தையும் அளித்தனர்.

எமது பள்ளி 'சஞ்சாயிகா' சிறு சேமிப்புத் திட்டத்தில் நாட்டிலேயே முதன்மையானது என அறிவிக்கப்பட்டது. இதற்கான பாராட்டு விழா தேசிய சிறுசேமிப்பு நிறுவனத்திரால் 9.4.78ம் நாளில் நடத்தப்பட்டது. தமிழக ஆளுநர் **மாண்புமிகு பிரபுதாஸ்** அவர்களும், மாநிலக் கல்வி அமைச்சர் **மாண்புமிகு. அரங்கநாயகம்** அவர்களும், கோவை மாவட்ட ஆய்வாளர் **திரு. மொய்தீன்** அவர்களும் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தனர். தேசிய அளவிலும், மாநில அளவிலும் கேடயங்கள் பரிசாக வழங்கினர். 11.3.81 அன்று பள்ளியில் நடந்த விழாவில் மாண்புமிகு தமிழக முதல் அமைச்சர் **திரு. எம்.ஜி. இராமச்சந்திரன்** அவர்கள் நாட்டில் முதன்மையாக விளங்கியமைக்காக மாணாக்கியரைப் பாராட்டி தமிழக அரசு சார்பாக ஒரு பெரிய கேடயத்தையும் பரிசாக வழங்கினார். சஞ்சாயிகா திட்டத்தில் மாவட்ட அளவில் 89 - 90 ல் முதலிடம் வகித்தமைக்கு பரிசுத் தொகை பள்ளிக்கு வழங்கப்பட்டது.

சஞ்சாயிகா திட்டத்தில் அதிக அளவில் சேமித்ததற்கு ஊக்கப் பரிசாக இதுவரை பள்ளிக்கு 11 மின்விசிறிகள் மாவட்ட ஆட்சித் தலைவரால் வழங்கப்பட்டுள்ளன. மேலும் தலைமையாசிரியைகளுக்கு ஊக்கத் தொகையும் கொடுக்கப்பட்டுள்ளது. நிரந்தர வைப்பு நிதியில் சேமித்ததற்கு குலுக்கல் மூலம் பள்ளிக்கு மாருதி வேன் பரிசாக கிடைத்துள்ளது.

ஒவ்வொரு வாரமும் திங்கள், வெள்ளி ஆகிய இரு தினங்களில் மேல்நிலைப் பள்ளி மாணவியரும், புதன் கிழமை துவக்கப் பள்ளிக் குழந்தைகளும், செவ்வாய்க் கிழமையன்று ஆங்கிலப் பள்ளிக் குழந்தைகளும், வியாழனன்று மெட்ரிகுலேஷன் மாணவியரும் தங்களின் சேமிப்புத் தொகையை கொண்டு வந்து சேமிக்கின்றனர்.

ஒவ்வொரு கல்வியாண்டின் இறுதியிலும் அதிக அளவில் சேமித்த முதல் மூன்று மாணவியருக்கு பரிசுகள் கொடுக்கப்படுகின்றன. துவக்கப்பள்ளி, ஆங்கிலப்பள்ளி, மேல்நிலைப் பள்ளி, மெட்ரிகுலேஷன் பள்ளி ஆகிய நான்கு பள்ளி மாணவியருக்கும் தனித்தனியாக பரிசுகள் கொடுக்கப்படுகின்றன. இந்த ஊக்கப் பரிசால் மாணவியர் உற்சாகத்துடன் சேமிக்கின்றனர். இதுவரை எமது பள்ளி சேமித்த தொகை ரூ. 5,88,395 ஆகும். அனைத்துப் பள்ளி மாணவியரும் இத்திட்டத்தில் சேர்ந்துள்ளனர். அவர்கள் சேமிக்கும் தொகை அஞ்சலகத்தில் போடப்பட்டு வருகிறது. பள்ளிக் குழந்தைகள் சஞ்சாயிகா திட்டத்தில் பயனடைவது குறித்து பெருமகிழ்ச்சியடைகிறோம். பள்ளியின் பணிகள் மேலும் சிறக்க வாழ்த்துகிறோம்.

# எம் பள்ளியில் சாரணீயம்

திருமதி. சுகிர்த கல்யாணி

Guide, Captain

'குறிக்கோளுடன் வாழ்பவனே உண்மை மனிதன். குறிக்கோளின்றி வாழ்பவன் மனிதப்பதர்'. மற்றவர்கள் குறிக்கோளுடன் வாழ்கிறாரோ இல்லையோ சாரண சாரணிகளாகிய நாம் குறிக்கோளுடன் வாழக் கடமைப்பட்டிருக்கிறோம். ஒவ்வொரு சாரணியும் தனது வீட்டில் சேவையைத் துவக்கிப் பள்ளியில், சமுதாயத்தில், ஏன் வாழ்க்கையிலேயே கடைப்பிடிப்பது மிக மிக அவசியம்.

## புள்புள் இயக்கம் :

இவ்வியக்கம் 1961 ஆம் ஆண்டு மூன்று ஆசிரியர்களால் 48 மாணவிகளுடன் துவக்கப்பட்டு, தற்போது பெரும்பான்மையான மாணவிகளுக்கு பல நல்ல பண்புகளைக் கற்பிக்கின்றது. 'இளமையில் கல்' என்ற முதுரைக் கேற்ப எந்த ஒரு கருத்தையும் சிறு வயதிலேயே கற்றுக் கொடுத்து விட்டால் அது பசுமரத்தாணி போல் இளம் சிறாரின் உள்ளத்தில் பதிந்து விடும். ஆகையால் இம்மாணவிகளுக்கு அவர்களது பயிற்சியை அளிப்பது மிகவும் எளிமையாக உள்ளது.

## சாரணீய இயக்கம் :

எமது பள்ளியின் நைட்டிங்கேல் சாரணீய இயக்கமானது 1959-ம் ஆண்டு 15 பேர் அடங்கிய குழுவாக ஒரு ஆசிரியர் மூலமாகவும், பயிற்சி பெறாத சில ஆசிரியர்களாலும் பயிற்றுவிக்கப்பட்டது. தற்போது 9 ஆசிரியர்களால் ஒவ்வொரு வியாழக்கிழமையும் 3.30 மணி முதல் 4.30 வரை சாரணீய வகுப்புகள் நடைபெறுகின்றன. அவ்வமயம் பிரவேஷ், பிரதம சோபன், த்விதிய சோபன், த்ருதிய சோபன், ராஜ்ய புரஸ்கார், ராஷ்டிரபதி என்ற நிலைகளுக்கான பாடங்களை எளிய முறையில் நடத்துகின்றனர். பல போட்டிகளில் மாணவிகள் பங்கு பெற்று பல மாநில, தேசிய விருதுகளைப் பெற்றுள்ளனர். இவ்வியக்கத்தின் மூலகர்த்தாவான Lord Baden Powell அவர்களின் பிறந்த நாளை ஒவ்வொரு வருடமும் பிப்ரவரி 22ம் நாள் கொண்டாடி வருகின்றோம். அப்போது பல கலைநிகழ்ச்சிகள் நடத்தியும், பல பரிசுகள் கொடுத்தும் இது நாள் வரை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகின்றோம். இவ்வியக்கத்தின் மூலமாக சாரணீயர் முதலுதவி, சாலைவிதிகள், தோட்ட வேலை, சமையல் கலை, சேவை மனப்பான்மை, பொதுத் தொண்டு, கலை நிகழ்ச்சிகள் போன்ற பயிற்சிகளில் மற்ற மாணவிகளை விடச் சிறந்து விளங்க ஏதுவாக உள்ளது.

## திரி சாரணியர் :

புள்புள் பயிற்சி பெற்றுச் சாரணீயர்களாகி அப்பயிற்சியினை முடித்தபின் அவர்கள் திரிசாரணீயர் ஆகின்றனர். அவர்களும் பொதுத் தொண்டு, மருத்துவமனைக்குச் சென்று பார்வையிடுதல், உதவி செய்தல், சாலை விதிகளைக் காத்தல் போன்ற செயல்களைச் செய்து வருகின்றனர்.

## குருளையர் :

1969ம் ஆண்டு சுமார் 36 சிறுவர்களைக் கொண்டு குருளையர் பிரிவு ஆரம்பிக்கப்பட்டது. குருளையர் மாணவர்கள் மிகுந்த உற்சாகத்துடன் இப்பயிற்சியில் ஈடுபட்டுள்ளனர். எமது பள்ளியின் தற்போதைய தாளாளர் திருமதி. மங்களவதி, மாவட்ட சாரணீய உபதலைவர் திருமதி. பெலிஷீயா ஜோசப், மாவட்ட சாரணீய உதவி ஆணையர், திருமதி லில்லி புஷ்பம் மேரி, தலைமையாசிரியை அவர்களுடைய ஊக்குவிப்பினாலும், முயற்சியினாலும் சாரணீய இயக்கமானது மேலும் வளர்ச்சி பெற்றுள்ளது.

'இன்முகத்துடன் சேவை செய்' என்பது எம்பள்ளியின் குறிக்கோள். அது சாரணிய சட்டங்களுள் ஒன்றாகும். இதனை இணைந்து கற்கும் எம்மாணவியர் சிறந்த குடிகளாக நாட்டின் நலன் கருதி தொண்டாற்ற இறைவன் அருள் செய்ய இறைஞ்சுகின்றோம்.

ஆரம்பத்தில் எளிய கூரை கட்டடங்களைக் கொண்ட வகுப்பறைகள் இன்று வியத்தகு மாடிக் கட்டடங்களாகத் திகழ்கின்றன. எல்லாம் வல்ல இறைவனது ஆசியால் சொற்ப எண்ணிக்கையுடைய் மாணவ மாணாக்கியர்களையும் ஆசிரியர்களையும் கொண்ட எம்பள்ளிக் கூடமானது படிப்படியாக முன்னேற இரவும் பகலும் தன்னலம் கருதாமல் அயராது உழைத்தவர் கலைமகள் அன்னையாகத் திகழ்ந்து சமீபத்தில் இறைவனடி சேர்ந்த செல்வி M. முத்தையா அவர்கள் என்பதை அனைவரும் அறிவர். கலைமகளில் பயின்று வெளியேறிய மாணவ மாணாக்கியர்களில் அநேகர் இன்று மருத்துவர்களாகவும், பொறியியல் வல்லுனர்களாகவும், வழக்கறிஞர்களாகவும், அரசாங்கத்தில் உயர்பதவி வகிப்பவர்களாகவும், ஆசிரியர்களாகவும், வங்கியில் பணிபுரிபவர்களாகவும் பணிபுரிந்து கலைமகளின் பெருமைதனைப் பிரதிபலிக்கும் நட்சத்திரங்களாக மின்னிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து பேருவகை அடைகிறோம்.

இவண் பணிபுரியும் ஆசிரியர்கள் மற்றும் பெற்றோர்களின் பங்கும் இதில் உண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. தொடர்ந்து இந்த நிலையத்தை நடத்திச் செல்லும் தாளாளர் திருமதி. மங்களவதி MA. MEd. அவர்கள், அன்னாருக்கு உறுதுணையாக உதவி வரும் ஒருங்கமைப்பாளர் திருமதி. ஃபெலிஷியா ஜோசப் MA. MEd, அவர்கள் மற்றும் நல்லாசிரியர்கள் அனைவரும் இந்தக் கலைமகளாம் கலைக்கோயிலுக்கு ஆற்றிவரும் அயரா சேவைக்காக எம் குழந்தைகளது பெற்றோர்கள், தங்களது நன்றியையும் ஒத்துழைப்பையும் ஆதரவையும் இன்றும் நல்கி வருகிறார்கள்.

வயோதிகர் ஒருவர் மாங்கன்றினை நட்ட சம்பவக்கதை விளக்கும் உண்மையை யாம் அனைவரும் அறிவோம். அங்ஙனமே வருங்கால மாணவச் செல்வங்கள் கல்வி என்னும் அழியாச் செல்வத்தினை என்றும் அடையும் வண்ணம் பல முன்னேற்பாடுகளை எம் நிலையம் தன்னகத்தே கொண்டுள்ளது. எடுத்துக்காட்டாக நுழைவாயிலின் முன்புறமுள்ள ஐயாவின் முழு உருவ வெண்கலச் சிலை, தொல்பொருள் ஆராய்ச்சி மையம் (Kalaimagal Meenakshi Sundaram Archaeological Learning and Research Centre), அறிவியல் ஆய்வுக் கூடம், Project Room, நூல் நிலையம், சாந்தி இல்லம், துதி இல்லம் ஆகியவை ஆகும். இவையனைத்தும் வருங்கால மாணவச் செல்வங்களுக்குப் பயனளிக்கும் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. இத்துணைச் சீரும் சிறப்பும் பெற்று பொன்விழா தனைக் கொண்டாடும் எமது நிலையம், தமிழ்நாட்டின்கண் ஒரு சாந்தினிகேதனாக அமைந்துள்ளது. ஈரோடு மக்களுக்கு இறைவன் அளித்த வரப்பிரசாதம் அன்றோ!

## From Our Visitors' Book

Permanent Address:

1475-127 Hiregasaki,
Nagareyama - Shi,
Chiba 270-01
JAPAN.

It was a great pleasure to see all the excavated objects from Kodumanal Village, which I saw about five years ago when I stayed for a small research.

திருமதி. சக்குபாய் and செல்வி. பாலசரசுவதி kindly took as around and explained the details on each object, which was very helpful to us.

I would like to express my thankfulness to your school.

மிகவும் நன்றி. (Sd) xxxx



திரு. S. மீனாட்சி சுந்தா முதலியார் நூலகம்
மேல்நிலைப் பள்ளி



மெட்ரிகுலேசன் பள்ளி நூலகம்

வைரமாக ஒளி பெறச் செய்யப்படுகின்றது.

அறிஞர்கள் பெருமக்களின் ஆயிரக்கணக்கான நூல்களைத் திரட்டி அற்புதமானதோர் நூல் நிலையத்தை இங்கு நிறுவியுள்ளனர். இதில் காட்டியுள்ள தனிக் கவனம் இப்பள்ளியின் சான்றாண்மைக்கு ஒரு சான்றாகும்.

ஐயா, எஸ். மீனாட்சி சுந்தரனார் திருப்பெயரில் ஒரு தொல்பொருள் ஆய்வு மையம் அமைத்து ஆய்வு செய்ய அனைத்தும் செய்து உள்ளார்கள். பழங்கால ஓலைச் சுவடிகள், கல்வெட்டுகள், ஆவணங்கள் செப்பேடுகள், சிற்பங்கள் என வரலாற்றின் வரிகளை இங்கே காண முடிகிறது.

அனைத்து வசதிகளும் நிரம்பிய சோதனைக் கூடம் மாணவியர் செய்யும் சாதனைக்கு ஏற்ப ஓர் சாதனைக் கூடமாக விளங்குகிறது.

## கலைமகளின் "வித்து" ஐயா :

அனைத்துக்கும் மகுடம் வைத்தாற் போல் விளங்குவது கலைமகள் கல்வி நிலையத்தின் வசந்த கால உருவம் ஐயா, எஸ். மீனாட்சி சுந்தரனார் அங்கு சிலை வடிவில் நிற்பதாகும். காண்போரைக் கவரும் கம்பீரமான உருவத்தில் சிலையான ஐயா அனைத்தையும் கண்காணித்தும், காத்தும், ஆசீர்வதித்தும் அருள் புரிகின்றனர். ஒளி வடிவில் அங்கே உயிர் பெற்று நிற்கின்றார்.

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்

என்ற பாரதியின் புரட்சிக் கவிதைக்கு உயிர் கொடுக்க உதயமானதுதான் ஐயாவின் கலைமகள் கல்வி நிலையம். இத்துணை சிறப்புக்கும் ஏற்ற,

"நாடு மணக்க வந்த நற்கற்பூரச்
சொற்கோவே, இருமொழி சொற் கொண்டலே!
நீடு துயில் கொண்ட நித்திலத்து மாமணியே!
ஐயாவே! வாழிய நின்புகழ்!

## கலைமகளின் விருட்சம் அம்மா :

வித்தாக இருந்து ஐயாவால் ஆரம்பிக்கப்பட்ட இந்நிலையம் வறுமை என்னும் சோதனைப் புயலில் சிக்கி சிரமப்பட்டுக் கொண்டிருந்த போது 1955ம் ஆண்டு இன்று அம்மாவென்று அனைவராலும் அழைக்கப்படும் செல்வி மே கமலம் முத்தையா அவர்கள் இந்நிலையத்தின் தலைமையாசிரியரானார். அவர் வரும் போதே தன்னுடன் கலைமகள், மலைமகள், அலைமகள் என மூவரையும் அழைத்து வந்தாரென்றே சொல்லலாம். அந்த அளவுக்கு இவர் வந்ததில் இருந்தே இப்பள்ளி வளரத் துவங்கியது. தாகம் உள்ளவர்கட்குத் தண்ணீரையும், வறண்ட நிலங்கட்கு ஆறுகளையும் அளிப்பதாககூறியுள்ள ஆண்டவனின் அருள் இங்கும் கிடைத்தது. அதனால் வறுமையும் இவருடன் சிறிது காலம் போராடி தோற்று ஓடத் துவங்கியது. இவரே இந்நிலையத்தின் விருட்சமாக இருந்து கல்வி நிழல் தந்து காத்துவரும் அம்மாவானார்.

இந்த நேரத்தில் நான் நினைப்பதெல்லாம் இதுதான், சாவுக்கோர் சாவு வந்திருந்தால் இந்த கலைமகளின் சரித்திர நாயகி சாகாமல் இருந்திருப்பார்கள். இந்த இளைய சந்ததியும் இன்னும் பல நன்மைகள் அடைந்திருக்கும். வெற்றித் திருமகளே! வீரத்தின் நிலைமகளே! கலைமகளின் அம்மாவே! கல்வியின் மாமணியே! வாழ்க நின் புகழ்!

## கலைமகளின் விழுது மங்களவதி அம்மா!

அந்த புரட்சிப் புயலுக்குப் பின் பொறுப்பேற்றுள்ள அமைதிப்புயல் இது! தென்றல் தவழும் அமைதி முகம், தேன் தமிழும் தெளிந்த ஆங்கிலமும் மாறி மாறி வரிசை காட்டும் மொழியழகு. மற்றவர் உள்ளக் கிடக்கை துருவி எடுக்கும் ஆழ்ந்த பார்வை! திருத்தமான தமிழும், பொருத்தமான ஆங்கிலமும் புரண்டு வரும் மொழியாட்சியில் மிரண்டு நிற்கும் மாணவியரின் திருந்தாத மனமும் திருந்தும். எவ்வழி நல்வழி அவ்வழி நம்வழி என பள்ளியை நடத்திச் செல்லும் மாண்பினர், என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற நாவுக்கரசரின் தெய்வ வாக்கை நாளும் கடைப்பிடிக்கும் நற்றாய்!

"நீ நயந்து நோக்கும் வாய் பொன்பூப்ப
நீ சினந்து நோக்குகம்வாய் எரிதவழ"

என்ற சங்கப் புலவரின் பாடலின் வரி வடிவம், உன் சேவையில் இவ்விருட்சத்தின் விழுதாக இருந்து பள்ளியைப் பாதுகாக்கவும் உங்களிடம் ஒப்படைத்துள்ள எங்கள் கண்மணிகளை உங்கள் கண் விழி போல் காத்து வாருங்கள். கல்வி நிழல் தரும் மாமணியே! மங்களவதி அம்மாவே! வாழிய நின்புகழ்!

## கலைமகளின் 'கிளை' ஆசிரியப் பெருமக்கள் :

'ஆசிரியப் பணி அறப்பணி, நல்லதோர் குடும்பம் பல்கலைக்கழகம்' என்ற வார்த்தையின் உண்மை

*We Thank our*



School Photographer

**Thiru. N. CHANDRASEKARAN, B.A.,**

## Ajanta Studio & Video Coverage

7, S. K. C. Road,

ERODE - 638 001.

*Our Thanks are due to*

**Thiru. C. V. KESAVAN**

## Rajan Art Printers

**13-F/3, Gandhi Road,**

**SIVAKASI - 626 123.**

**☎ Off.: 21381, Res.: 23162**